உ



பரமபதிதுணை

# விறலிவிடுதூது.

இஃது

இராமநாதபுரஞ்சமஸ்தானவித்துவான்

ம-ா-ா-ஸ்ரீ, துவாத்ரிம் சதவதானி

**சரவணப்பெருமாட்கவிராய**

**ரவர்களா லியற்றியது.**

ஷை கவிராயரவர்கள் தமையன்குமாரராகிய

மதுரை

சங்கீத சாஹித்ய பக்தவிஜய கதாப்ரசங்கவித்வான்

ம-ா-ா-ஸ்ரீ, மதுரகவி

மீனாட்சிசுந்தரதாசரவர்கள்சகோதரர்

சங்கீதவித்வான்

**வீரபத்திரக்கவிராயர் அவர்களால்**

ஸ்ரீலட்சுமிநாராயணவிலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

**1903**

இதன்விலை அணா - ச.



உ

வேலுமயிலுந்துணை.

இராமநாதபுரஞ்சமஸ்தானம்

ம-௱-௱-ஸ்ரீ,

சிவசாமிசேதுபதியவர்கள்பேரில்

# விறலிவிடுதூது.

## வழிபடுகடவுள்வணக்கம்.

நேரிசைவெண்பா.

திருமருகன்சேலைச் சிவசாமிசெல்வத்
தருமருமன்மேல்விறலி சாற்றக்—கருணைசெய்வான்
மாதங்கத்தானனத்தான் மாதவன்வானோர்பரவு
மாதங்கத்தானனத்தான் வந்து.

நூல்.

## விறலிப்புகழ்ச்சி.

திருமாலும்பொன்னுலகத் தேவர்களுந்தேவ
பெருமானுமின்பம்பெருக—வரிசேர்
டவரவம்பூட்டிநெடு மந்தரத்தைநாட்டிப்
புடவியதிரத்திருகும்போது—கடலிற்
புடைபட்டெழுந்துவந்த புத்தமுதமன்னாட்
கடைபட்டதென்றுகடத்தி—வடியிட்ட
தேங்குழம்பைக்கள்ளுவெறி சேர்ந்ததெனவகற்றி
மாங்கனிக்குங்கொஞ்சம்வடுக்காட்டிப்—பூங்குயிலை
யாங்கோதுசின்னமென்று மாலைக்கருப்பமொழி
தாங்கோதுபட்டதென்றுந்தள்ளிவைத்துப்—பாங்கிலிசை
பொங்குதமிழ்ப்பால்வாங்கிப் பூங்கருணைத்தேன்கலந்து
மங்களராகப்பாகின்மத்தித்துச்—சங்கீதக்
கானரசமெழுப்பிக் கற்றோர்செவிக்கமுத
பானரசமென்னவிசைப்பண்காட்டித்—தானொருபாற்
கிள்ளைமொழிவந்துகற்கக் கேட்குங்குழல்வகைக
ளுள்ளதெல்லாம்பேசாதொழித்துவிட—வெள்ளைநிறட்

பாரதியும்நாரணியும் பார்மகளுந்தும்புருவும்
நாரதரும்வந்துநயங்கேட்பச்—சாரமுள்ள

புத்தர்முழுந்தானுருகப் பட்டமரமுந்தழையச்
சித்திரமுங்கூடச்சிரமசைக்க—வெத்திசையும்

விண்டுருகக்கற்றறிந்தோர் மெய்யுருகவின்பரசங்
கண்டுருகக்கல்லுங்கரைந்துருகத்—தொண்டைசற்றும்

விக்காமல்வீணையிசை மிஞ்சாமற்பாடிடசொற்
றிக்காமல்ராகஞ்சிதையாமற்—பக்கத்திற்

சித்தங்கலையாமற் சிற்றிடைதள்ளாடாமற்
குத்துமுலையுங்குலுங்காமற்—கத்திமுனை
வெல்லம்போவென்னும் விழியிமையுங்கோட்டாமல்
வெல்லம்போற்பாடும்விறலியே—வல்லமையாய்

மன்மதனால்பார்க்கு மதியுள்ளவாலிபர்க்குச்
சொன்னமுலைக்கோட்டுசொர்க்கமே—யென்றுனுங்

காகம்பறவாத காமக்கடலுடுமே
நாகசுனைகாட்டுநாயகமே—போகவெறி

ஏர்காட்டுங்காமத் திளைஞோர்விளையாட்டுப்
போர்காட்டுமாலவட்டப்பூந்தேரே—யாரும்

வரிசைத்திருநிதம்ப மண்டபத்தைக்கண்டு
தெருசிக்கமுத்திதருந்தேவே—பருவமுள்ள

வேடிக்கைவாலிபரை விஸ்தாரக்கொச்சிமஞ்சள்
வாடைக்குள்ளாக்குமருக்கொழுந்தே—நாடிப்பொன்

பாரப்பலாச்சுளைக்கும் பாலுக்குமாங்கனிக்குஞ்
சாரச்சுவைபயிற்றுஞ்சர்க்கரையே—போர்பெற்ற

கோபாலசக்கரத்தைக் கொண்டுகொடுத்துமுத்து
வியாபாரஞ்செய்யுமுதலாளியே—சோபமொடு

சொம்பாயனுதினமுஞ் சுற்றியிளைஞோர்களசங்
கொம்பானைவந்தவிழுங்கொப்பமே—நம்பியெதிர்

வக்கணையேபேசிவரும் வாலிபராங்காளைகளைச்
சிக்கிப்பிடிக்குந்திருகுணியே—தக்கோருக்

கெவ்வளவுந்தன்மமறிந் தீயார்புதைத்தபொரு
ளெவ்வளவும்பார்த்தெடுக்குமஞ்சனமே—செவ்வாகப்

பாரிலிளைஞோர்களெனும் பாராவாரற்கன்றுகளை
வாரிப்பிடிக்குமணிவலையே—சீராக

வென்றியுள்ளவாலிபராம் வீட்டிலெலாம்போய்வலியச்
சென்றுவிழுஞ்சோதிமணித்தீபமே—துன்றுமிருள்

காய்பொசிதோளாரம்பைக் கன்னியருங்காதல்வைக்கக்
காய் [illegible] டிவருங்காரிகையே—தேய்பொதிந்த

பாகனாரகங்காட்டிப் பண்காட்டிக்கண்காட்டி
மோகனாரகங்காட்டுமோகனமே—நாகமன்னன்
நாட்டையரசாட்சிசெயும் நங்கைசெவிக்காரமுந்தாய்
நாட்டைநயங்காட்டுமதனாட்டமே—சூட்டுமணி
நாகவராளிக்கிசைக்கொண் ணுதவளுராகநய
நாகவராளிக்கிசைந்தநாயகமே—மேகநிறச்
சாரங்கராகந் தழுவியின்பத்தேனூட்டுஞ்
சாரங்கராகப்பிரசங்கமே—சீர்பொங்கும்
பாடிபிராகவன்பேர் பாரவருக்குண்டாகத்
தோடியிராகம்பாடுந்தோகையே—மோடிசெய்து
கத்தரிப்புட்கொண்டகடுங் கன்னெஞ்சையுங்கரைக்குந்
தித்திரிப்புக்கேற்றசிரோமணியே—பைத்தசொர்ண
விண்டதுபரமுலை மேனகையேயான்வருத்தங்
கொண்டதுயரமெலாங்கூறக்கேள்—பெண்டியுடன்
பூசலிட்டுக்காற்றூடி போற்சுழன்றுநான்சிலநாட்
டேசமெட்டுந்திக்குந்திரிந்ததுவும்—வாசத்
திருமருதூர்சேர்ந்து திருகுணிக்குட்சிக்கி
வருமெருதாய்த்தாசிவசமாகி—யுருகியதும்
என்னிளமைவேசைமகட் கீந்ததுவுங்கூனிகைக்குட்
சொன்னமெல்லாம்நான்கொடுத்துத்தோற்றதுவுங்—கன்னிவி
லைதந்ததுவுஞ்சேர்ந்திருந்த மாணுங்கூடிவஞ்சஞ்
செய்ததுவுமம்பலத்திற்சேர்ந்ததுவுந்—தொய்யவெனை
யாட்டவட்டங்கொண்டதுவு மப்பாலுபாயமதாய்
வீட்டைவிட்டுத்தூரவிரட்டியதுங்—கோட்டுமுலைக்
கன்னியைநாள்விட்டுக் கடந்துவெளியேறியதுந்
தென்முகவையம்பதியிற்சேர்ந்ததுவும்—அன்னையன்ன

## பாடத்தலைவன் புகழ்ச்சி

வந்திக்குவந்ததுவு மங்கைமங்களேசரடி
வந்திக்குந்தூயமனத்தானை—முந்தமரிற்
சிந்தூரத்தஞ்சிந்தூரத்தைச் சேரமருவார்தளத்தைச்
சிந்தூரத்தகைச்சிந்தூரத்தானை—வந்துகப்பங்
காணவைத்துப்பொன்முடிமேற் கையைவைத்துப்போற்றுதார்
தாணயத்தைவென்றதளத்தானை—சேனுலவும்
போரானைத்தன்மனிலை போரானைத்தென்முகவை
யூரானையற்சுணன்றேரூர்ந்தானை—நேரான
செஞ்சொனவாஞ்சித செயம்பெருதுரந்தானை
பஞ்சலரிறைஞ்சசரணம்புயனை—தஞ்சமென்று

வந்தவர்சகாயன்விசு வாசசதுரங்கதள
தந்திரபுயமந்தரசவுந்தரனைத்—தந்திரமா
யெத்தளப்புப்பார்க்குமொன்றுரேழுசுற்றுக்கற்கோட்டை
கொத்தளத்தைத்தூளாக்குங்கோமானை—நித்தநித்தங்
கப்பமிடச்சொல்லிக் கலிங்கருக்குச்சீட்டெழுதி
யொப்பமிடுங்கொர்ச்சிதபயோதரனைச்—செப்புமுலைத்
தையலர்க்குவேளைத் தனுகோடிகாவலனைத்
துய்யகடற்றெண்டித்துறையானைச்—செய்யவள
மேதினியாள்முத்து விசயரகுநாத
சேதுபதிசெல்வச்சிரோமணியை—மாதரசு
விண்மணியாய்வந்தமுத்து வீராயிநாச்சியார்
கண்மணியைமன்னவர்சிகாமணியை—எண்ணுபுகழ்
நாதன்விசையரகு நாதசிவசாமி
சேதுபதியைச்செயபதியை—யாதிபனைக்
கண்டதுவுமெங்கோன் கருணைமுகம்பார்த்துமகிழ்
கொண்டதுவுந்தண்டமிழ்யான்கூறியதும்—பண்டென்
கலியார்கலியைக் கடந்தப்பாலோடிப்
புலியாரைக்கண்டமான்போல—விலகியதுஞ்
செல்வம்வந்துகூடியதுஞ் சித்தமகிழ்ந்தென்மனையாள்
நல்வசனங்காணமனம்நாடியது—மெல்லமெல்ல
இங்கவனைத்தேடிநாணின்றுவந்துசேர்ந்ததுவுந்
தங்கவனைக்கைமாதேசாற்றக்கே—ளெங்குமலர்

## தசாங்கம்.

கொந்தாரும்பூஞ்சோலைக்கொம்பெல்லாங்கார்மேகம்
வந்தூரப்பிள்ளைமதியூரச்—சந்தூருந்
தென்றற்காறேடிச் சிலைமாரன்வந்திருக்க
மன்றற்காறேடிமகவானிருக்கத்—தென்றமிழை
பன்னுகும்பனிப்பூமி பாரத்துக்காயிருக்க
மன்னுபுகழ்த்தென்பொதியமாமலையான்—பொன்னையள்ளித்
தெள்ளுபுனற்கையாற் சிறந்தமலரைத்தூவி
யள்ளிக்கனிகளையன்பாக்குவித்து—வெள்ளைநிறச்
சங்கமணிதாங்கிச் சைவசமயந்தாங்கிச்
செங்கமலர்தாங்கிவருஞ்செய்கையாற்—பொங்கியபா
லன்னத்தைவாரிவரு மாதரவாலாசைதரும்
பொன்னைத்தரும்பாக்கும்பொற்பினு—வன்மணியால்
மின்பரவுந்தன்கரைவாய்.வீற்றிருக்குமீசனடிக்
கன்பரைப்போலும்வையையாற்றினுன்—பொன்பரவு

# விறலிவிடு தூது.

தேவரரசாட்சி செய்வதனாற்செவ்வரம்பை
மேவுதலாற்கற்பகத்தார்மிச்சத்தால்—நாவிரசத்

தெள்ளமுதுண்டானகடற் சேர்க்கையாற்சொற்புலவ
ருள்ளதனாற்சிந்தாமணியுளதால்—விள்ளரிதாம்

பொன்னாட்டைப்போலும் புகழ்நாட்டிச்சீர்நாட்டும்
நன்னாட்டின்மிக்கசெம்பொனாட்டினான்—மின்னாட்டி

வாடுமருங்கார் வருநடைகண்டன்னமெல்லாம்
நாடிவருமுகவைநன்னகரான்—நீடுமுனை

வெஞ்சினங்களுங்கிளம்ப வெண்டயஞ்சதங்கைகொஞ்ச
வஞ்சர்நெஞ்சகங்கலங்கமஞ்சுடைந்த—கஞ்சுருங்க
மண்டலங்களுந்தயங்க மந்தரஞ்சுழன்றொதுங்க
அண்டபிண்டமுங்கலங்கவந்தராந்தி—ரண்டெழும்ப
அட்டதிக்குமெட்டுவெற்பு மப்புறப்படக்குதித்து
வட்டமிட்டரைக்கணத்தின்மைப்புயற்றி—ரட்டகற்றி
மற்றறச்சினத்தெதிர்த்த மக்கரைப்படைத்துவைத்து
வெற்றிபெற்றசக்ரவட்டவெண்பரியான்—பற்றும்
இருப்புலக்கையாற்கீறி யேறிவருமொன்னா
ரிருப்புலக்கையெல்லாமிடித்து—நெருப்பைப்
பிடித்துபிழிந்து பெலத்துவாரத்தை
யடித்துமகமேருவைத்தூளாக்கி—விடப்பாரப்
பையரவொரெட்டைப் பணிமணியென்றேசினந்து
துய்யமேகங்களையுஞ்சூற்கிழித்து—வெய்யவனைத்
தெற்குவடக்காகத் திருப்பிப்பழையபடி
வைக்குமுக்ரவீரமதவாரணத்தான்—மைக்குழலார்
கண்டுவண்டுமேடவிழ்த்துக் கானவிசைவாசிக்குந்
தண்வண்டுஞ்சூழுமுல்லைத்தாரினான்—வண்மையென்றுந்
தோன்றவருவெற்றியென்றுஞ் சூடியகல்யாணமென்றும்
மூன்றாய்முழங்கும்முரசினான்—வான்றாவிப்
பற்றியிராகுக்கேதுப் பாம்புகளைத்தேடுதல்போற்
சுற்றுங்கருடதுவசத்தான்—சற்றுமனம்
பார்க்குளடங்கார்க்கும் பாரராசராசர்முதல்
யார்க்கும்பயஞ்சனிக்குமாணையான்—சீர்க்கமலத்
தேமாந்தவளமலர் சேர்ந்துவளர்நாமாது
மாமாதுவீற்றிருக்கும்வாசலினான்—பாமாலை
பூணுந்தமிழ்க்கொண்டுவந்து பொன்வரிசைதந்துகவி
வாணர்கலிதீர்க்குமணிவாசலினான்—மாணிக்கஞ்
சிங்களதேசத்தரசர் சீனத்தரசருடன்
வங்காளங்கப்பமிடும்வாசலினான்—இங்கிதனாற்

பச்சைக்குடைகமலப் பத்திரம்போலேயிலங்க
உச்சக்காம்பேநாளமொப்பாக—மிச்சமாய்ச்

சந்த்ரகாவிக்குடைசெந் தாமரைப்பூப்போன்மலர
விந்தைபெறுவேன்குடைவெண்டாமரைபோல்—வந்துலவும்

விள்ளரியமன்னர்குடை மேற்கிடக்குஞ்சாமரைகள்
வெள்ளோதிமந்துயிலும்விந்தைபெறத்—துள்ளுசமர்

வேடங்கண்மாறி விருதாசர்போட்டபல்லக்
கோடங்களாயலகையோட்டிவரக்—கேடகங்கள்

பங்கமடமடக்கப் பார்த்துப்பதுங்குகின்ற
வெங்கமடம்போலேமிதந்தமிழ்ந்தச்—செங்கண்மரு

வாரைவென்றுவாகைகொண்டு வாளிலங்குபானுதிங்கள்
நேரில்வந்துசூழ்சிலம்பினீண்முடிமேற்—சேர்கருட

கேதனத்தைநாட்டிக் கிரீடமன்னர்கொண்டுவரு
மாதவத்தைக்கப்பமெனவாங்கியே—நீதனந்தா
மக்கரங்காரதிமன்னர் வந்துதொழவையமெல்லாஞ்
சக்கரநடாத்துந்தனுராமன்—மிக்கபுகழ்
சேர்க்குஞ்சிலைராயன் சேதுகண்டநாண்முதலாக்
காக்கும்தனுக்கோடிக்காவலவன்—தாக்கியசெங்
காவிச்சிவிகையான் காவிக்கொடியினான்
காவிக்குடையான்கவிக்குடையான்—பூவிலங்கும்
வாசமுல்லைமாலையான் மாவிரணியாகற்ப
யாசிரவிகுலசிலாக்கியவான்—பேசி
அடைக்கலங்காத்தான் அனுமதுவசத்தான்
படைத்திடுமுத்துச்சலாபத்தான்—பிடித்திருக்கும்
வங்காரடாலினான் மாநாடுகாவலான்
சிங்காரவீழ்ந்திறைகொண்டோன்—செங்காவி
டாலினான்பஞ்சவர்ண டாலினான்கூறுமுனை
வேலினான்றாலிக்குவேலியான்—வூலிடுமா
முன்வந்துகாத்த முகுந்தனொருவீமனுக்கு
முன்வந்தானென்னவந்தமூர்த்திகரன்—மின்னுமழைக்
கொண்டல்வண்டினந்திரண்ட கொந்தளந்தனந்தனங்கொள்
விண்டுசெண்டுபந்துகொம்புமென்குடங்கள்—கண்டுசெஞ்சொல்
செங்கணங்குடங்கையம்பு சிந்துகொண்டசங்குதொண்டை
பங்கயங்கள்செங்கையென்றுபண்பொருந்து—பெண்களின்ப
மாரனுக்குநேருரைக்கும் வாலசித்ரரூபன்வெற்றி
மேருவொத்ததீரசுத்தவீரன்மிக்க—சீர்படைத்த
தனதன்மஞ்சவிளரவைத்து தருவைவென்றகாதலன்பொன்
மனமகிழ்ந்துமணியிதென்றுவளர்புயன்பு—வனமடந்தை

# விறலி விடு தூது.

விந்தைநிறைந்தமுத்தமிழ்க்கும் வென்றிவிக்ரமன்றுதித்து
மூந்தமிழ்த்தசிங்காரத்தின்முன்புதித்தோன்—சந்ததமுன்

தன்மதியானந் தமிழ்க்குமதியசன்வதன
நன்மதியான்றெவ்வரைக்கண்ணுண்மதியான்—தென்மலைய

வந்தனத்தான்றந்தைபத வந்தனத்தான்மார்பிலணி
சந்தனத்தான்பொன்னனின்மிச் சந்தனத்தான்—பந்து

சனத்தான்மிக்கோர்பா சனத்தானரியா
சனத்தானிசவசனத்தான்—இனித்த

கரும்புரசம்போன்முக் கனிரசம்போல்யாரும்
விரும்புமொழிபகரும்வேந்தன்—பெரும்புகழ்சேர்

மேதினியாள்முத்து விசயரகுநாதச்
சேதுபதிசிங்காசனபதிக்கும்—ஆதரவாய்த்

தஞ்சநீயென்றுவந்து சார்ந்தோர்கள்யாவரையும்
அஞ்சலென்றுகாத்தருளுமன்புத்தாய்—மஞ்சுபெருந்

தன்மப்பயிர்தழைக்கத் தாரணியெலாந்தழைக்க
நன்மைப்பயிர்வளர்க்குஞ்ஞானத்தாய்—பொன்மங்கைதரு

தேவைப்பதியுமன்பரற் சிந்தையைத்துப்பூசித்துத்
தேவைப்பதிகாக்குஞ்செல்வத்தாய்—பாவலஞ்சேர்

வாசமலர்மாதைப்போல் வந்தாய்சேதுமகா
ராசிமுத்துவீராயிராணிக்கும்—வாசமுள்ள

புத்திரசிரோமணியிப் பூமிமுழுதும்புரக்கும்
சத்திரபதியெங்கள்சிவசாமிமன்னன்—முத்தளந்து

வங்கரங்கர்கொங்கர் மலையாளர்யாழ்ப்பாணர்
சிங்களவிராடர்திறைகுவிக்கச்—செங்கைகொண்டு

வங்காளமன்னர் வணங்கக்கொலுவிருக்குஞ்
சிங்காசனாதிபதிசேதுபதி—பொங்குமனு

நீதிபதிகோடி நிதிபதிமுத்துச்செல்லர்
சேதுபதிக்குத்திருமருகன்—ஓதுதமிழ்

வித்தைக்ககத்தியனை வில்லுக்கருச்சுனனைச்
சித்தசனைவாலசீவகனை—மொய்த்த

கனகனைகுபேரனைமார்க் கண்டனைமெஞ்ஞான
சனகனைச்சற்கீர்த்திதழைத்தானை—இனியமொழிச்

சத்தியவான்மால்ராம சாமிமகாராசனைத்தான்
மைத்துனனென்றேயழைக்கும்மானபரன்—சித்தமிசை

யாதரவாய்ப்பாண்டவரை யாண்டவிசையரகு
நாதசிவசாமிநராதிபதி—யோதுபுகழ்

பாடியகற்றோர்க்குபய பல்லக்குத்தந்துபுகழ்
தேடுஞ்சிவசாமிசேதுபதி—நீடுகவி

உதையாதியிலெழுந்தே னூர்க்குவந்தேன்றம்பி
இதையார்க்குஞ்சொல்லாதேயென்றேன்—சதிராக
வையாற்றுத்தண்ணீரில் வந்துசந்திபண்ணினேன்
பொய்யாலேகெட்டமுழுப்போக்கறுவான்—பையமுனனே
போனான்மனைவியிடம் புன்சிரிப்பாகச்சிரித்தான்
தேனாள்விசேடமுண்டோசெப்பென்றாள்—மானேயுன்
னையரையேயல்லா ததிசயமுண்டோவேசைத்
தையலையேகூடித்தழுவினார்—பையவெளித்
திண்ணையிலிராமுழுதுந் தெய்வமேயென்றுநான்
கண்ணுறக்கமில்லாமற்காத்திருந்தேன்—பெண்ணழகி
பொன்னேறுபூண்முலைக்கு பூசையல்லால்நம்பளம்மன்
பொன்னேறுபூண்முலைக்குப்பூசையில்லை—கன்னியல்குற்
றேரோட்டங்கண்டுதெரி சித்ததல்லாற்சாமிதிருத்
தேரோட்டங்கண்டுதெரிசித்தறியார்—நாரிமுலைக்
கும்பதெரிசனமே கொண்டதல்லாற்கோவிலடிக்
கும்பதெரிசனமேகண்டறியார்—சம்பிமுகம்
வாடியுதையாதியிலே வந்தார்பிரயாணமென்றார்
நாடியுமைவிட்டிரோனென்றாள்—தேடியிங்கே
நாளையேவாரமென்றார் நல்லதுபோய்வாருமென்றாள்
மீளவிதோவாரார்நான்விட்டுவந்தேன்—ஆளழகர்
இந்தரகசியத்தை யார்க்குமுரையாதேயென்
றந்தரங்கஞ்சொன்னாரவரென்று—வந்ததெல்லாங்
கண்டித்துச்சொல்லிமனை கன்னிமனம்வேறாக்கி
வண்டப்பயலும்வச்சுவாங்கினான்—பெண்டி
கொடுகொடுப்பைவந்துகண்டு கொண்டேன்முகத்திற்
கடுகடுப்பையுங்கூடக்கண்டேன்—இடுசோற்றில்
வெஞ்சினத்தைநான்காணேன் வீட்டுக்கும்வாசலுக்கும்
வெஞ்சினத்தைக்கண்டுநான்மெய்மறந்தேன்—லஞ்சிகிட்டப்
போனேன்வெறுமனே போவெனைநீதீண்டாதே
சீநீயுன்றாசியிடஞ்செல்லென்றாள்—ஏனென்
உறவேதெனக்கு முனக்குமினியென்று
பறைபோலலறிப்பகர்ந்தாள்—இறைவனோ
டேறுமாறானமனை யாளுமிம்மூன்று
நீறுநீறாகிவிடுமென்றசொல்லைத்—தேறிமனந்

### அவதானி
### யாத்திரைசெய்தமைகூறல்.

தானேவெறுத்துத் தலங்களெல்லாம்போய்ப்பணிந்து
ஞானத்தையும்பெறுவோநாமென்று—மேனிரம்பு

## விறலிவிடுதூது.

மாமணியுமாபரண வர்க்கமுஞ்செம்பொன்முடிப்புந்
தாமெடுத்திராநடுவிற்றப்பினேன்—காமவி

காரத்தைநீக்கிக் கதிபெறுவோமென் றுவரு
நேரத்தைச்சற் றுநினையாமற்—சீர்பெற்ற

நாரியொருபாகனுக்கன் றொருவேளாளன்முனை
வாரியமுதிட்டமணிநகரும்—காரணமாய்ப்

பொய்ப்பிள்ளையாயிருந்த பொற்பிள்ளைபாண்டியற்கு
மெய்ப்பிள்ளையானவியநகரும்—மெப்புகழுஞ்

சூடுமிரணியனார் துன்பத்துக்காவிமையோர்
கூடியளப்பிட்டிருந்தகோநகருங்—கோடி

விசவாளரவணிந்தோன் வேசையொருத்திக்கு
ரசவாதஞ்சொன்னநகரும்—அசுரர்பகை

வென்றுவச்சிரபாணிபெற்ற வேழத்தைவேற்பெருமான்
மன்றன்முடித்தவளம்பதியும்—அன்றுதிர்ந்த
தொட்டுக்காய்தாவென் றுமைபாகனன்றொருநாட்
பிட்டுக்காய்மண்சுமந்தபேரூரும்—கட்டளையாய்
மைப்புயல்போல்வண்ணன் வருடத்திலேயொருநாட்
சப்பரத்திலேறுந்தனிமலையும்—பொற்பாவை
மேவுமணிமார்பனொரு வீடணன்கைப்பொட்டகத்தாற்
றுவியிருந்ததடம்பதியும்—பூவுலகுந்
தேவருமஞ்சச் சிரம்பத்தான்றனையத்தார்
மூவரினிற்பின்னென்றழைத்தமூதூரும்—மேவுமுகில்
விண்மாரியென்னவொரு மென்சிவந்திப்பூவுக்கா
மண்மாரிபெய்தமணிநகரும்—அண்ணலெதிர்
ஆனவடிவப்பிரம னன்னவடிவாய்த்திருமா
லேனவடிவானவெழிநகரும்—மேன்மைநுதற்
கண்ணுடையான்றன்னுடைய கைப்பாத்திரங்காட்டி
மண்ணுடையானைக்காத்தமாநகரும்—எண்ணுமண்
திண்டாட்டமாகச் சிவனொருவணிகன்
பெண்டாட்டியைக்கேட்டபேரூரும்—பண்டொருநாள்
வள்ளையுண்டகாதிமய மங்கைமுலைப்பாலையொரு
பிள்ளையுண்டுமேன்மைபெற்றபேரூரும்—கள்ளுறும்
யெண்ணிக்கைமாங்கனியை யீசனருளாலழைத்த
பெண்ணிருந்துவாழ்ந்தபெரும்பதியும்—வண்ணவலை
துன்றுதிரைக்கடலைத் தொட்டார்பொருட்டாக
வன்றுவந்தகங்கையணிநகரும்—சென்றுசிரைக்
கங்கையுடையான்வணங்கக் கங்கையுடையான்வணங்குங்
கங்கைநதியாடிக்கரையேறி—யங்கிருந்த

செப்பரியசங்கமுக தீர்த்தமாடிச்சீனக்
கப்பலிலேயேறிகடல்வழியாய்—செப்புதமிழ்ப்
பாமதுரம்பாடிப் பதின்மூன்றுநாளையிலே
ராமீசுரத்துக்குநான்வந்தேன்—சோமனணி
தானுமையும்போற்றித் தனுக்கோடிநீராடித்
தோணிவழிபாம்பன்றுறைகடந்தேன்—தூணிமதன்
வில்லாணிமுத்துமதன் வெள்ளைமுத்துமேவுதிரு
புல்லாணிமால்பதத்தைப்போற்றிசெய்தேன்—சொல்வளஞ்சேர்
செல்வமுதுகுளத்தூர்ச் செவ்வேளைப்போற்றியங்கே
கல்வியுடையோர்கள்சிநேகம்பெற்றேன்—நல்வழியா
யாள்வார்திருநகரி யாண்டாரைப்பூசித்தேன்
வேள்வாழ்திருச்செந்தூர்மேவினேன்—நீளசுரக்
குன்றெறிந்தவேலவரைக் கும்பிட்டுத்தென்புறம்போய்
நின்றுகன்னியாகுமரிநீராடிச்—சென்றுமனப்
பற்றுகவேநடந்து பாவவினைசம்பணிந்து
குற்றாலநாதரையுங்கும்பிட்டேன்—கற்றுவாழ்
முல்லையப்பனுலே முளைத்தபரஞ்சோதி
நெல்லையப்பர்தாள்பணிந்துநேசித்தேன்—ஜெல்லைக்
கருச்சுழியைநீக்குங் கழுகுமலைபோற்றித்
திருச்சுழிகையூர்க்குவந்துசேர்ந்தேன்—பருப்பதவிற்
கையவனைப்போற்றிக் கனிந்துமுதுகுளத்தூ
ரையன்முருகையனையாண்டபிரான்—செய்யமலர்ப்
பாதம்பணிசெய்தேன் பத்துநாளங்கிருந்தேன்
வேதனையனட்பைவிரும்பினேன்—ஆதிமறை
ஓதூர்திருமருதூ ருட்சேபங்கண்டுவர
மாதவரேநீர்கூடவாருமென்றேன்—ஏதுகாண்

## வேதனையன் நல்வழியுரைத்தல்.

தீர்க்கவும்விசாரணைநீர் செய்யவில்லையோமதுரை
யூர்க்குளேசெட்டியொருகோவலவன்—பாக்கியமுள்ள
கன்னகையாள்சொல்லைக் கடந்துமாதேவிகைக்குட்
பொன்னையெல்லாந்தோற்றுப்புலையாடிப்—பின்னுமவன்
பேரிழந்துவீடிழந்து பெண்டிழந்துபோனுளிப்
பாரிலவனுடகத்தைப்பார்க்கலையோ—நீர்சென்றால்

## மோகனமுத்தின் பிறப்புணர்த்தல்.

ஊதிபத்தைக்கேளுமந்த வூர்க்கோயிற்றுசிகளிற்
கோதையொருபொல்லாக்குடிகேடி—மாதவள்பேர்

# வி ற லி வி டு தூ து.

செங்கமலவல்லி திருகுதாளக்காரி
மங்கைவெகுநாளாய் மலடிருந்து—செங்கடாய்
ஐயனுக்குவெட்டியப்பா ஸம்மனுக்குப்பொங்கலிட்டு.
செய்யவடிவேலவர்க்குத் தெண்டனிட்டுத்—துய்யவெள்ளி
யெண்ணிவிரதமிருந் தீசர்க்கபிடேகம்
பண்ணியபினேழாம் பருவத்தில்—வண்ணவண்ண
மாப்பிளைமார்கைவலுவான் மாப்பழுக்குநாளையிலே
பூப்பதுபோற்கற்பம் பொருந்தினாள்—வாய்ப்பாகப்
பள்ளத்திற்பஞ்சிட்டுப் பாரமெழுந்ததுபோல்
வெள்ளையழுக்குப்போன் மிகுந்திட்டா—ளள்ளியுண்ட
வெல்லசங்குமட்டிமசக் கேறியிடைசிறுத்து
மெல்லமெல்லக்கண்குழிந்து மேல்பசந்து—பல்விளர்ந்து
சித்தமருண்டாளென் சேதுபதிமால்யானை
மத்தகத்தைப்போலே வயிறானாள்—பத்தாகு
மாத்தையிலேநாகபட [illegible]ர்ய்வழியேரத்னமணி
பூத்ததுபோற்பெற்றாளோர் பொற்கொடியை—பார்த்தவர்கள்
ஆண்பிள்ளையேயென்று ரப்போதேவேசையிது
வீண்பிழையேயில்லையென்று மீண்டெழுந்தாள்—சேண்புவியில்
மிச்சமாய்ச்செம்பொன் விளையும்ரசவாதப்
பச்சிலையீதென்று [illegible]ரிந்தெடுத்தாள்—முச்சகத்திற்

## மோகனமுத்தின் வளர்ப்புணர்த்தல்.

கோதையிவள்காமக் குளிராட்டவந்தவளென்
றாதரவாய்மஞ்சணீ ராட்டினாள்—சாதிநாம்
ஈரமில்லாச்சாதிநமக் கீரமேனென்றுடம்பி
வீரமில்லாமற்றுவட்டி யேந்தினாள்—காருடக்
கத்தரிப்புஞ்சூதுங் கபடும்பகடமுந்
தித்திரிப்புந்திட்டாந் திரத்தொழிலுஞ்—சித்தத்தைப்
பங்கப்படுத்திவைக்கும் பாசாங்கும்வஞ்சமும்பொய்
யுங்கலந்துசேனைப்பா லூட்டினா—ளெங்கருணைக்
கண்ணேயென்கண்மணியே காமரசக்கரும்பே
பெண்ணேயான்பெற்ற பெரும்பேறே—வண்ணக்
குயிலேமரகதமே கோமளமேபச்சை
மயிலேயெனத்துடைமேல் வைத்தா—ளொயிலாக
ஒற்றைப்பிறைவயிற்றி லுண்டானமுப்பிறைபோல்
நெற்றிக்கழகாய்வெண் ணீறணிந்தாள்—முற்றமயல்
பூட்டிவந்தவாலிபர்கைப் பொன்னையெல்லாம்வாங்கக்கை
தீட்டென்றுசிந்தூரந் தீட்டினாள்—ஆட்டிவைக்கும்

மால்விழிக்கும்போதெல்லாம் வாலிபருக்குண்டாக்குஞ்
சேல்விழிக்குமஞ்சனத்தைத் தீட்டினாள்—மேனுலவு

வன்னப்புதுமதியில் வந்தகளங்கம்போலே
கன்னநுதினூடே கருப்பிட்டாள்—மின்னாசை

மாற்றுவார்தங்களுக்கும் வாலிபர்க்கும்பேராசை
யேற்றுவாயென்றுதொட்டி லேற்றினாள்—போற்றியுனைச்

சேராரார்கண்டாசை தீராரார்பொன்னையள்ளித்
தாராராரென்று தாராட்டினா—ளாராய்ந்து
கொற்றவர்கைப்பொன்னையெல்லாங் கொள்ளையடித்தவ்வளவுஞ்
சுற்றென்றுதிட்டிகையாற் சுற்றினா—ளுற்றிளைஞோர்
பேழ்டையெலாந்தந்து திரும்பவிருந்தால்வழியைக்
காட்டென்றுவெண்ணிலவு காட்டினாள்—தாட்டீகர்
குத்திப்பொன்னவ்வளவுங் கொள்ளையடியென்றுசெவி
குத்திப்பொன்வாளி குலுக்கியிட்டாள்—சித்திரக்கை
வெட்டுவாண்மன்னவர்போன் வீட்டுமுதலையெல்லாங்
கொட்டுவாயென்றுவட்டில் கொட்டினாள்—இஷ்டமுடன்
தென்முகவையாளுஞ் சிவசாமிசேதுபதி
தன்மம்வளர்ப்பதுபோற் றன்வளர்த்தாள்—மின்னாள்
அடியெடுத்தாள்காமுகர்பொன் னவ்வளவுங்கொட்ட
அடியெடுத்தாள்கூன்கிழ வெள்ளாட்டி—குடிலமாய்ப்
பார்க்குமிருகண்மருட்டிப் பார்த்திட்டாளவ்வூரில்
யார்க்கும்புதுமுறை யுண்டாக்கினாள்—தாய்க்கிழவி
சிற்றாடையிட்டாள் சிலம்பிட்டாள்பீலியிட்டாள்
பொற்றாலவடமிட்டாள் பூச்சிட்டாள்—குற்றமிலா
வாப்பிட்டமெய்யாட்கு மாரன்திருநாட்குக்
காப்பிட்டாப்போலேகைக் காப்பிட்டாள்—தோப்பினுள்ள
வண்டையிட்டகண்ணாட்கு வாரிட்டாள்குப்பியிட்டாள்
தண்டையிட்டாள்சொர்ணச் சதங்கையிட்டாள்—ஒண்டொடியை
மாகனமாலையெல்லாம் வாலிபர்க்குநீகொடென்று
மோகனமாலையிட்டாள் முத்திட்டாள்—சேகரித்துக்
கொண்டுவந்துசெம்பொன் கொடுவாதசண்டிகளைக்
கண்டியென்றுமார்பிலொரு கண்டியிட்டாள்—உண்டாய்
வழியொன்றுமில்லாமல் வந்தவர்க்குப்பைய
நெழியென்றுதங்கநெழி யிட்டாள்—அழகாய்
வரிகிடந்தகண்ணாட்கு வாலிபர்பொன்னெல்லாஞ்
சரியிடென்றுகூனி சரியிட்டாள்—அரிவையர்க்குத்
தக்கையிட்டாளோலையிட்டாள் தங்கப்பதக்கனிட்டாள்
கைக்குவளையலிட்டாள் கடகமிட்டாள்—சொற்கடங்கா

# விறலிவிடுதூது.

முத்துமூக்குத்தியிட்டாள் முப்புரியும்பெற்றவிலைக்
கொத்துமுருகிட்டாள் கொலுசிட்டாள்—சித்திரக்கன்
மோதிரங்க[illegible]யிலிட்டாள் மோகனமுத்தென்றுசொல்லிப்
பேதைக்குலகறியப் பேரிட்டாள்—ஆதரவாய்ச்
செந்தமிழுங்கன்னடமுந் தேன்பாகுபோற்றெலுங்குஞ்
சந்தநயமும்பாரத சாஸ்திரமும்—அந்திசந்தி

## தாய்க்கிழவி மோகனமுத்தின் பருவக்குறி கண்டமைகூறல்.

நேத்தியாகப்படித்து நித்தஞ்சாஸ்வதிக்கும்
வாத்தியாரென்ன மகிமைபெற்றாள்—சாஸ்திரமும்
ஆரியமுங்கற்று ளலங்காரமங்கையொரு
காரியத்தின்மேலுங் கருத்தானாள்—பூராயம்
பேசுவதுங்கொஞ்சம் பிலுக்குவதுங்கிட்டவரக்
கூசுவதுமுத்துக் குலுக்குவதும்—வாசமலர்
சூடுவதும்விண்ணாஞ் சொல்லுவதுங்கானரசம்
பாடுவதுங்கண்மருட்டிப் பார்ப்பதுவும்—ஆடவரைக்
கொண்டாடிக்கொள்ளுவதுங் கூடிவிளையாடுவதுங்
கண்டாள்கிழவி களிகூர்ந்தாள்—மிண்டர்
குடியையுழுதுங்கெடுத்துக் கொள்ளையிடுமாயப்
பொடியைமகட்குரைத்துப் போட்டாள்—படியேறி
நல்லதிருநாளில் நாகலிங்கர்சன்னிதியி
லெல்லவருங்காண வரங்கேற்றினாள்—தெல்லுப்போற்
குண்டுமணிபோற் குரும்பைபோற்பம்பரம்போற்
செண்டுபோற்கொங்கை திமிரேறித்—தண்டித்து
மானுந்திரண்டாள்பின் வாலிபர்கள்வந்துவந்து
தானுந்திரண்டார் தளந்தளமாய்த்—தேன்மொழியாள்
தீர்க்கமுங்காமப்பழக்கச் சித்திரமும்ஆடவர்மே
னோக்கமுந்தாய்க்கிழவி நோக்கினாள்—சேர்க்கையுள்ள

## தாய்க்கிழவி மோகனமுத்துக்குப் போதிப்புணர்த்தல்.

பெண்ணையருகிருத்திப் பேச்சிட்டுநான்பெற்ற
கண்ணேயுன்புத்திக்குக் கண்ணுண்டே—வண்ணமணி
வல்லார்தனத்து மயிலேகுலவித்தை
கல்லாமற்பாதிவருங் கண்டாயே—யில்லவ்டி
பட்டத்துப்பெண்ணே பலாப்பழத்துக்கீப்பிடித்து
விட்டபேருண்டோ விளம்புவாய்—கட்டாக்ப்

பார்விளக்கிற்பற்றவைத்த பந்தயோனுலுங்
தார்குழலையென்புத்தி சற்றேகேள்—நேராக
என்னைமறந்தாலு மெங்கோன்சிவசாமி
மன்னவன்மேற்கோவை மறவாதே—என்னாளும்
பாலைபழுக்குமோ பாற்சோருகிட்டுமோ
காலத்துவேளாண்மை கைப்பலனேமேலான
செட்டிக்கொருதட்டு சேவகனுக்குமொரு
வெட்டுனக்கிப்போதொரு வியாழவட்டங்—கட்டுவிட்டே
ஊடுநரைகண்டுகென்ன முஞ்சுரித்தானம்மைவந்து
தேடிநிதியார்கொடுப்பார் செல்வமே—வீடு
பெருக்கவரும்நமக்குப் பேராய்முதலைப்
பெருக்கவருமோவருவைப் பெண்ணே—யொருத்தருனக்
காத்தேபணத்தை யளந்தளந்துதந்தாலும்
மாத்தைப்படியென்று வாங்காதே—நேத்தியாய்த்
தம்பலங்கள்தின்பதற்குந் தப்புமொழிசொல்வதற்குஞ்
சும்பனங்கள்செய்வதர்க்குஞ் சோம்பாதே—வம்பிபெற்ற
சேயேபணங்கொடுக்குஞ் சீமான்களுக்குநம்மள்
வாயேபடிக்கமடி வாலுதலே—ஓயாமல்
முக்கோடிசெம்பொன் முகந்தளந்துதந்தாலுங்
கொக்கோகம்பார்த்தவரைக் கூடாதே—கைக்கெதுவா
யண்டிப்பணங்கொடுத்தோ ராரொருத்தர்வந்தாலும்
பண்டுமுறையெவ்வளவும் பாராதே—கொண்டுவந்து
தாய்க்கிழம்பிள்ளைபணந் தந்தணைந்தபோதவர்க்கு
வாய்க்கிழ்வடுக்களைநீ வையாதே—பேய்மகளே
பத்துநவகோடி பசும்பொன்கொடுத்தணைந்த
சுத்தருக்குமுள்ளவர்மஞ் சொல்லாதே—எத்தாக
உல்லாசப்பெண்ணே யுனக்குமுழுக்குநாள்
எல்லையொருவர்க்கு மியம்பாதே—சொல்லிலே
பூசிமெழுகிச்சாடை போட்டுவெறும்பேச்சுப்
பேசுவர்பால்வீண்பேச்சுப் பேசாதே—மோசமடி
கள்ளுக்குடித்தவர்க்குங் கஞ்சாக்குடித்தவர்க்கும்
எள்ளளவும்நீசற் றிணங்காதே—பிள்ளைமார்
கைச்சரசங்காட்டுங் கருணீகர்வந்தாக்காற்
கைச்சரசமெள்ளளவுங் காட்டாதே—மெச்சிக்
கருத்தாய்ச்சிரித்தாலுங் கார்காசுகாணச்
சிரித்தாலேநேத்தியடி தேனே—பொருந்தியிரா
முப்பதுநாழிகைக்கு முப்பதுபேர்வந்தாலுங்
கைப்பொருளைவாங்கக் கருவேணும்—எப்போதுங்

# விறலிவிடுதூது.

தேம்பதுமமாதே செகத்திற்பணமென்றாற்
பாம்புந்தலையெடுத்துப் பார்க்குமே—நாம்பார்க்கப்

பைமுதலைக்கொண்டுசிறு பாலகர்வந்தாலவர்க்குச்
செய்யுங்கலவிதெரியாது—பையப்

படுக்கைநயங்காட்டிப் பழக்கப்படுத்தி
யிடுப்பையுன்காலுக்குள் ளிடுக்கிக்—கொடுக்கைவளைத்

துள்ளேயமுக்கி யுயரநீயேறியொரு
துள்ளிவிழுத்தாட்டி சுகங்காட்டி—மெள்ளக்கால்
பின்னைப்பறித்தந்த பேய்மாலங்கொண்டுவந்த
பொன்னைப்பறித்தகலப் போகவிடு—பின்னே

நரைக்கிழவர்வந்தா னழுவாதேமுற்றன்
மரத்திலேயுண்டு வைரங்—தரைக்குட்
பசுக்கிழடேயானாலும் பாலுருசிபோமா
நிசத்திலிருமென்று நெருங்கி—வசப்படுத்திச்
சேலைத்துணிபோற் சிசுனமிருக்குமந்தத்
தோலைப்பிடித்துச் சுழற்றிவிட்டாற்—காலுக்குட்
காமப்பாலோடுமவர்கைப்பொருளைக்கொள்ளையிட்டும்
போமப்பாவென்றவரைப் போகவிடு—காமியுனக்
கென்மேலேயாசையுண்டோ வென்பாரவர்களைப்பார்த்
துன்னாசைநான்விட் டொழிவேனா—வுன்னைவிட
வேறுமுகம்பார்ப்பேனா விட்டுப்பிரிவேனா
தேறுவனாசீவ னிருக்குமா—மாறிமனம்

பற்றுவனோநித்திரையும் பண்ணுவனாவுண்பேனா
சற்றேயென்காலுந் தரிக்குமா—மற்றவரைப்
போலொருவர்கிட்டவுநான் போவேனாமுந்தியினி
மேலொருவருக்கு விரிப்பேனா—நீலாவென்
றேகம்நிலைக்குமா சிந்தைமறக்குமா
ஓகோவுலோகமொப்புக் கொள்ளுமா—ஆகெடுவாய்
பூவிற்றபேர்கடையிற் புல்லுவிற்பாராவென்று
கோவித்தழுதுபையக் கூட்டிப்போய்ச்—சீவச்

சவடமவனைநடுக் சந்தியிலேபோட்டுக்
கூவடியடிநான்பெற்ற கண்ணே—புவியிலிதை
யாளுக்காட்சொல்லியவர்கள்தலையிலடி
மீளத்தான்கையால் விளக்கிலடி—கீளவட்டிற்
சோற்றுத்தலையிலடி சொலலிறாருணையிடு
தேற்றிக்கழுத்தறுக்குஞ் சிரிதுவே—வேற்றுரைக்கும்
எத்துக்கும்வஞ்சனைக்கு மிட்டிடும்பொய்யாணைக்குஞ்
சத்தியங்களுக்கும்நீ தாளாதே—சித்திரிப்புஞ்

சூதும்கபடமுஞ் சொற்பிரட்டும்வஞ்சகமுங்
கோதாய்நமக்குக் குடியிருப்பே—மாதே
இனிமைதயவிரக்க மெல்லாம்நமக்குக்
கனவினிலுமில்லையடி கண்ணே—தினநமக்குப்
பொய்யேகுலவித்தை போடுவதேயுப்புமண்ணு
மெய்யேதுநாமேது மெல்லியலே—வையுமா
தெய்வம்நம்மையென்னசெய்யுந் தேவரடியார்நாம்
ஐயமில்லைபொய்யாணைக் கஞ்சாதே—தையலே
அன்னளெழுத்து மழியுமாவுள்ளபடி
முன்னுள்விதிதான் முடியுமடி—தன்மனைரு
பொய்சொல்லிவாழ்ந்தான் புகழுமரிச்சந்ரனொரு
பொய்கிடையாமற்றேசம் போக்கடித்தான்—கையிலே
செல்லாப்பணந்தருவார் சிலவாய்களைக்கிழித்து
மல்லாற்றிநல்லபணம் வாங்குவேன்—வல்லியிதைப்
பன்னியுரைப்பதென்னை பார்த்தாற்பசுவடிநான்
பொன்னைபுகுந்தாற் புலியடி—தன்னாலே
கட்டிவராகன்கொடுத்த காவலரும்நமக்குப்
பெட்டிவராகன்கொடுத்த பேயர்களும்—ஒட்டிலிங்கே
கண்டமட்டுமந்திசந்தி காத்திருந்தாற்றிண்டுமுண்டாய்ச்
சொண்டெனக்குச்சொல்லத் தெரியாதா—மண்டுகிறேன்
வேசைமனையம்பலமா வீணரெல்லாங்கூடியென்ன
பேசுகிறார்ஞாயமல்ல பெண்மயிலே—வாசலிலே
போகச்சொலென்கிறேன் போகாட்டாற்கிட்டப்போய்ச்
சோகைத்தடியா சுடுமுகரா—ஆகட்டும்
போவெளியிலேபோ பொதுவீடாநீயிதற்குக்
காவலாமொப்பமார் காணியா—பாவியிது
சத்திரமாவென்வீடு சந்தையாவென்றதட்டிப்
புத்திசொல்வேனப்படியும் போகாட்டான்—மெத்தமெத்த
ஏசுவேன்பின்னுமிருந்தாக்கா னுயைவிட்டுச்
சூசுவென்பேனதிலுந் தொட்டிருந்தால்—வாசல்மா
றில்லையாகைபி லெடுக்கிறேன்ரோசமற்ற
மொல்லைகளைத்தூர முடுக்கிறேன்—புல்லறுத்துப்
பர்விற்றபேரும் பணங்கொடுத்தாலிந்தவித்தை
தாய்வித்தையென்றே தழுவிவிடு—நாய்விற்ற
காசுகுலைக்குதோ கைத்தவேப்பெண்ணைவிற்ற
காசுகசக்குதோ காரிகையே—கூசுபுளி
மேவியகளாக்காய்போல் வெற்றிரசங்கொள்ளுவதே
தேவடியார்க்குள்ள திராணியடி—பாவையே

# விறலிவிடுதூது.

ஆடவர்மேல்வைத்திருக்கு மாசைபுளியம்பழமுந்
தோடும்போலேயிரடி தோகையே—தேடியுன்பால்

அண்ணனுந்தம்பியும்வந் தாலதற்குநாணாதே
திண்ணைவெவ்வேறுண்டடியென் செல்வமே—எண்ணாமல்

வாயடியால்வந்தசில வண்டரையென்கைத்தடியால்
நாயடித்தாற்போலவே நானடிப்பே—நீயே

கெதியடியென்றுன்னைவந்து கெஞ்சுவரையுன்கான்
மிதியடியாற்போட்டு விரட்டு—நிதமுங்

குருடர்பணத்திற் குருட்டுக்கண்ணுண்டோ
திருடர்பணந்தான் செல்லாதா—ஒருவர்
தமக்குநாஞ்சொந்தமுண்டா தார்குழலையந்தக்
கமுக்கமெல்லாங்கேளடியென் கண்ணே—நமக்குப்
பணங்கொடுத்தார்தெய்வம் பணங்கொடார்தீண்டாப்
பிணமடிநான்பெற்றெடுத்த பேதாய்—குணமுடனே
மன்மதபேய்க்கெவ்வளவும் வைத்துப்படையாத
சென்மமென்னசென்மமவீண் சென்மமே—யின்னங்கேள்

வெட்டைகிரந்திக்காரர் வேணதுதந்தாலுமவர்
கிட்டவும்போகாதே கிளிமொழியே—கட்டழகி
வட்டவல்குலல்லவிதா வாலிபர்பொன்னவ்வளவுங்
கொட்டிக்குனுக்குங் குழியடி—தொட்டேறுஞ்
சேனைத்தலைவருக்கோர் தேரடிதம்பிமார்
தானத்துக்கேற்ற தடாகமடி—மானரசே.
பொல்லாக்குணத்துப் புலவமார்வந்தாக்கா
லெல்லா[illegible]போலே யெண்ணாதே—மெல்லநயம்
பாடிநிதம்பத்துப் பணம்வேண்டுமென்பரந்தச்
சாடையறிந்து தழுவிவிடு—நாடெவர்க்கும்
அஞ்சுமடபதிக ளல்லூடேபூனைபோற்
கொஞ்சவருவாரவரைக் கூட்டிப்போய்—மஞ்ச
ளுடையிற்படாம லுரிங்தொதுங்கவைத்துச்
சடையைத்தலையணைய தாக்கிக்—கிடைகிடத்திக்
கையாற்சுழற்றியவர் காமத்தைப்போக்கியெங்க
ளையாவேபோமென் றனுப்பிவிடு—மெய்யான
செம்பிநாட்டுத்தலைமைத் தேவமாருக்குநம்மள்
கும்பிடேபோதுமடி கொம்பனையே—பைம்பொன்முடி
வேந்தரிடம்நீசேர்ந்தால் வேறொருவர்கிட்டவாரார்
மாந்திரிகர்கிட்டவும்பொன் வாங்காதே—சேர்ந்த
சனுக்கைநமக்குண்டுபிர தானிகளால்விட்டால்
வலியபோய்மேவி விடுமானே—யுலகிலுள்ள

சாமாகியத்தார் சமஸ்தானங்கள்வரந்தச்
சீமான்கள்சேகரமும் வேணுமடி—நேமகமாய்

அட்டவணைப்பிள்ளைமா ராரொருத்தர்வந்தாலுங்
கிட்டவணைத்துக் கிடத்திக்கொள்—ஒட்டிக்

குமஸ்தாக்கள்வந்தாற் குறைநமக்குண்டாமே
சமஸ்தானம்நாமடியென் றுயே—யிமைக்குமுன்னே

ராயசகாரருக்கு நாமிணங்கவேணுமவர்
ஆயாசம்வந்தா லழகல்வே—தோயவரும்

நம்பியாரையழுக்கு நம்மைத்தொட்டென்னவொரு
கும்பிடல்லாப்பின்னையென்ன கொள்ளையடி—கெம்பாமல்

மாதேயிருட்டில் வருவார்குருக்களையர்
பேதாயதைவெளியிற் பேசாதே—யோதுவான்

றந்தவரிசைக்குச் சரசமாய்நீசிரிக்குந்
தந்தவரிசை சரிதாண்டி—வந்திசையாய்ச்

சத்தமிட்டநாகசின்னச் சங்கீதக்காரனுக்கோர்
முத்தமிட்டாலும்போது மொய்குழலே—யெத்தியெத்தி
நட்புடனன்றேடியுன்னுறும் நாளையிலோர்வேடிக்கை
செப்பக்கேண்மைமந் திரமுடுக்கன்—றப்பிலியோர்
ஆரியப்பான்றிருவை யாற்றிலொருதாசிமுத்துக்
கூரிகைப்பொன்னையெல்லாங் கொள்ளையிட்டான்—நேரான

கொச்சிச்சிவக்கொழுந்தைக் கொட்டிக்குலைத்தவளைப்
பிச்சைக்கிவிட்டான்பிளந்தெறிவான்—பிச்சையாய்ச்

செந்தூர்க்கமலிமுதல் சேரப்பறித்தவளைச்
சந்தியிலேவிட்டான்சதிகேடன்—இந்தமுறை

வெள்ளைவாரத்தாய்தேடும் வேசையர்கைப்பொன்னையெல்லாங்
கொள்ளையடித்தான்மடவாய்க்கொக்குபோல்—கள்ளமடைக்

கெல்லாரும்வாரியெதுப் பைகட்டினார்களல்லால்
வல்லான்கைப்பொன்னொருவர்வாங்கவில்லைச்—சல்லியென்னை

இஷ்டமாய்த்தேடிவந்தா னின்றுசமையற்புரையின்
கிட்டமுயல்வந்துதென் றுகொர்ச்சித்துக்—கட்டளையாய்ச்

செம்மராட்டங்கறியைத் தின்பழக்கிப்பார்ப்பமிந்தப்
பொம்மலாட்டென்றவனைப்புல்லினேன்—வெம்முனைக்கை

வாளுருவிச்சோற்று மயக்கஞ்சரிசாம
வேளையிலேந்தாம்நாள்வெளியேறிக்—கேளாய்

ஒருகாற்செருப்பிட் டொருகணுக்குமையிட்
டொருகாதுக்கோலையுநானிட்டுப்—பெரியசடைப்

பின்னியோடேந்திப பிறந்தகோலத்துடன்போ

பேருடன்புதைத்த பிள்ளைமண்டைநெய்வடித்துக்
கூறுயதைவீட்டிற்கொண்டுவந்து—சோறதிலே
தானிட்டுப்பாலிலிட்டுச் சற்கரையிலிட்டவலிற்
றீனிட்டவன்கைத்திரவியத்தை—மானரசே
பண்டுபெரும்பூதமுலைப் பாலுமுயிருந்திருமா
லுண்டதுபோனவுருஞ்சியோட்டிவிட்டேன்—கண்டாயோ
சந்தியிலேநின்று தலைபுழுத்தநாயைப்போ
லந்தாசுணைகெட்டலைகிறான—முந்தத்
தினக்கட்டளையாய்ச் சிறுகச்சிறுக
வெனக்குச்செலவுபோயின்ன—முனக்கோர்
காண்டியிருக்குதுன்மேற் காதல்கொண்டபேரைக்
காண்டிவிடுநான்பெற்றகண்ணே—பிறந்ததுபோற்
றானேதுலாவேறித் தாசிமுழுமோசம்
போனதுபோனீமோசம்போகாதே—மானந்தால்
வெட்டுண்டவளையொரு மின்காரிததுபயினதும்
பெட்டிமணல்வாரும்பெருங்கதையுஞ்—சட்டமாய்ப்
பண்டுரைக்கக்கேட்கலையோ பாவாயிச்செய்தியெல்லாம்
விண்டுனக்குச்சொல்லவுந்தான்வேணுமோ—கெண்டைவிழி
வெட்டுமொருவேசை விடகூரணப்பொடியாள்
பட்டவபகடமும்பார்த்துக்கொள்—கெட்டிகெட்டி
தாழிவராகனுக்காச் சற்பனையோர்வேசைசெய்த
காளிதாசன்கதையுங்கேட்கலையோ—வாள்விழியாய்
இந்தவகையாய்த்தேடி யீழத்துவள்ளியென்றுஞ்
செந்தூர்முழுகியென்றுஞ்சின்னியென்றுஞ—சந்தான
நெல்லூர்மருதியென்றும் நெட்டூரழகியென்றும்
புல்லாணிச்செங்கமலப்பூவியென்றுஞ்—செல்வமுள்ள
வெங்களூர்ச்செல்வியென்று மேன்மைபெற்றாரென்றுமெத்தச்
சங்கையிலாமாயமெல்லாந்தாய்சொன்ன—ளிங்கே
வெகுமதிகள்சொன்னதெல்லா மின்னுமைக்கு
வெகுமதிதானென்றுவிருந்திட்டாள்—செகமீது

## மோகனமுத்தின் செய்திகூறல்.

வேடிக்கைவாலிபராம் வேங்கைப்புலிகளைக்கை
யாடிக்கண்வீச்சுவலையால்வீசிக்—கூடிப்
பிடித்தாசைச்சங்கிலியாற் பின்னியொருபாச்சல்
கொடுத்துமுலையானையாற்குத்தித்—தொடுத்தாலங்
காட்டிலொதுக்கியிரு கம்பத்தினூடுகுரங்
காட்டியல்குற்கூட்டிலடைத்திட்டாள்—கேட்டமாக்

தோயவரும்வாலிபர்கைச் சொர்ணமலையைப்பிடுங்கிப்
பாயுமனுமனுக்கொப்பாயினள்—மாயவித்தை

## அவளதுதோழிகளின் பெருமைகூறல்.

ஆட்கண்டராமியென்று மானமாருடியென்றுங்
கோட்கண்டமாயைக்குளிகையென்றும்—நாட்கொண்ட
காரூடக்கள்ளியென்றுங் கண்டவரையெத்தியென்றும்
வீரியத்துராக்காடிவெட்டியென்றும்—போராடிப்
பாதைமறித்தாளென்றும் பையப்பசப்பியென்றுந்
தாதியெட்டுப்பேர்களுண்டுதையலுக்குச்—சாதகமாய்
அக்கினியினீர்பிழிவா ராற்றுமணலைத்திரிப்பார்
கைக்குள்ளேவைகுந்தங்காட்டுவார்—தொக்காக
வானத்தைவில்லாய் வளைத்திடுவார்கொல்லவருங்
கானப்புலியையும்வாய்கட்டுவார்—தேனனைய
சேயிழையாரிந்தமுறை செய்திடப்பொன்றேடிவைக்கு
மாயமங்கைமாருக்கும்வாயிதட்டுஞ்—சாயலுக்கும்
சேல்விழிக்கும்வானுதற்குந் தேமொழிக்கும்வாசனைக்குங்
கால்களுக்குநூலிடைக்குங்கார்குழற்கும்—மால்பிடித்து

## அவளைவிரும்பிய ஆடவர்செய்திகூறல்.

காட்டுநெடும்பாய்மரத்துக் காகம்போற்சுற்றுவருஞ்
சேட்டுமத்திலீப்போற்றியங்குவருங்—கோட்டுவர்ன
வம்பிட்டகொங்கைநல்லாள் வாசற்றலைக்கடையிற்
கும்பிட்டுவீழ்ந்துகுழைவாருஞ்—சொம்பிட்ட
வாளாஞ்சிவக்கவிழி மாறுட்கிருபுறமுங்
காளாஞ்சியேந்திகனிவாரும்—நாளெல்லாம்
ஆணிப்பொன்னுழி யளந்தளந்துதந்தவட்குக்
காணிக்கைவைத்தடப்பங்கட்டுவரும்—பேணியிரு
கையைப்பிடித்திரண்டு காலுமடிமேலிருத்திப்
பையச்சுடக்குப்பறிப்பாரு—மொய்யாரச்
சேலேறுங்கண்ணுட்குத் திண்டோரம்நின்றுகொண்டு
மேலேமயில்விசிறிவீசுவரும்—நாலிடமுங்
கன்னிமஞ்சணீரையள்ளிக் கண்ணிரண்டுந்தான்கழுவிச்
சென்னியிலுங்கூடத்தெளிப்பாரும்—முன்னிருந்த
வெள்ளித்தாம்பாளத்தை விற்றுக்கருங்கிழட்டுக்
கொள்ளித்தேளுக்குக்கொடுப்பாரும்—உள்ளாகக்
கொட்டகையில்வந்துவந்து கூடிநரைத்தகிழட்
டொட்டகையைக்கண்டேயுலைவாரும்—இஷ்டமாய்

## வி ற லி வி டு தூ து.

மின்னாளை காணவரும் வேளைநரைக்கூன்கிழட்டுச்
சென்னாயைக்கண்டேதிகைப்பாருங்—கன்னிநம்மைக்

தாப்பாடுவாளென்று காணவந்தபேர்கிழட்டுத்
தோப்பாடியைக்கண்டேசோர்வாருஞ்—சீப்பிட்ட

மைக்கார்குழலியிடம் வந்தபேர்கூனநரைக்
கொக்காலகப்பட்டுக்கொள்வாரும்—பொய்க்கிழட்டு

மூழிதான்சாகாளோ முற்றுமதமதக்கத்
தாழியோவென்றுசலிப்பாருங்—காளிமுன்னே

தீக்கொளுத்திமாதவிடாய்ச் சேலைசுட்டுமந்திரத்தைத்
தாக்கியொருசக்கரமுந்தாபித்துத்—தோற்கிழட்டுத்

தீப்பாவைமாளவென்று சென்றுநடுச்சாமத்தின்
மாப்பாவைதான்புதைத்துவைப்பாரும்—பேய்ப்படுவார்

வெட்கமெல்லாம்போட்டுமங்கை வீட்டுப்பிழக்கடையின்
பக்கமெல்லாமெட்டியெட்டிப்பார்ப்பாருங்—கைக்கெதுவாய்க்

கஞ்சமுகமங்கையிரு கண்காணவம்மயிலே
மஞ்சளரைத்துவழிப்பாரும்—நெஞ்சிலே

தேமலழகிமுகஞ் சிந்துகுறுவேர்வையெல்லாஞ்
சோமனான்மெல்லத்துடைப்பாரும்—நேமுகமாய்

வண்டுவந்தகண்ணாட்கு மாங்கனியுந்தேன்குழலுங்
கொண்டுவந்துதின்னக்கொடுப்பாரும்—ஒண்டொடிக்குக்

கால்பிடித்துமேல்பிடித்துக் கைபிடித்துநிற்பாரும்
மால்பிடித்துநின்றுமலைப்பாரும்—பால்குடிக்க

மாடுகொடுத்ததற்கு மங்கைநல்லாளென்னதந்தாள்
ஓடுகொடுத்தாளென்றுரைப்பாருஞ்—சோடாகச்

சீப்புக்கொடுத்ததற்குத் தேனார்குழலியரை
யாப்புக்கொடுத்தாளென்றஞ்சுவருஞ்—சாப்பிட்ட

வட்டில்விளக்குவரும் வாசல்பெருக்குவரும்
முட்டியிலேதண்ணீர்முகப்பாருங்—கட்டளையாய்

நெல்லெடுத்துக்குத்துவரும் நெய்யுருக்கிவைப்பாரும்
புல்லறுத்துக்கொண்டுவந்துபோடுவருங்—கல்லடுப்பிற்

றீயூதுவாருமவள் தின்றதம்பலந்தனக்கு
வாயூறிக்கொண்டேவருவாரும்—சாளமிடை.

யாடையிலேசுற்றிநிழ லாடையிலேயுப்பரிகை
மேடையிலேகண்டுமெலிவாரும்—நீடியகைச்

சாட்டையிலேபம்பரம்வைச் சாட்டையிலேசுற்றுமதிற்
கோட்டையிலேயேறிக்குதிப்பாரும்—நீட்டுவிழிக்

கெண்டையிலேமுன்சருகைக் கெண்டையிலேபூமுடிக்குங்
கொண்டையிலேயாவிகுலைவாருந்—திண்டுமேற்

சாயையிலேபின்னழகுச் சாயையிலேவேல்விழிகள்
பாயையிலேயாவிபதைப்பாரும்—ஓயாமற்

கெண்டையிட்டகூர்விழிக்காய்க் கீசகனும்வீமனும்போற்
சண்டையிட்டுமெற்பிடித்துச்சாய்வாரும்—ஒண்டொடிக்கு

மேற்கட்டிகட்டினபேர் மெத்தமன்னைகட்டியதிற்
சீக்கட்டிகொண்டேதிரிவாரும்—நோய்க்கிடமாய்

ஆவாசப்பட்டிருமி யச்சுக்குலைந்தொதுங்கித்
தேவாங்குபோலேதிரிவாரும்—பாவையரைக்

கண்கண்டதெய்வமென்று கையெடுத்தபேர்கிரந்திப்
புண்கண்டுமேலசந்துபோவாரும்—விண்கண்ட

பாவாடைவீசமணிப் பல்லக்கிலேறியந்தப்
பூவைதலைவாசல்வழிபோவாரும்—யாவர்களுங்
கண்ணாரப்பார்க்கவந்தக் கன்னிமுட்டுச்சேலைகொண்டு
வண்ணான்றுரைக்குவருவாரும்—எண்ணவொண்ணாக்
காமவித்துப்போலெழுந்த காரிகைக்குக்காணிவிற்றுப்
பூமிவிற்றுத்தட்டழிந்துபோவாரும்—நாமிருந்த
வீட்டைவிற்றோமாட்டைவிற்றோமெத்தைவிற்றோம்வட்டில்விற்றோப்
ஆட்டைவிற்றோமென்றேயலைவாருங்—கோட்டைமன்னர்
கன்னியிடம்வந்தணையக் கட்டிலுக்காலுள்ளோடி
முன்னிருந்தபேர்பயந்துமுக்குழிக்க—வன்னேரம்
பாழானவிந்திரியம் பல்லிடிக்கிலேவழியக்
கீழாய்ப்பதுங்கிக்கிடப்பாரும்—ஊழ்விதியால்
யாருமேயிப்படி யலைந்திருக்குநாளிலிந்த
ஊரிலேராமயனென்றோர்பார்ப்பான்—பாரவான்
ஆளிலழக னருச்சுனன்கோவிலவன்
நாளுமிந்தவூர்க்கொருபிராமணிக்கன்—கேளும்
ஒருகணிகம்மைபய வுரசப்போய்மாடு
திருகுணிக்குளாகிவிட்டசீர்போற்—கருகி
யொருபொழுதுநாடிமரு ந்தேடிப்போனான்
றெரிவையரைக்கண்டவளைச்சேர்ந்தா—னரசழிவான்
கூடிமருந்திட்டாள்பொன் கொள்ளையிட்டாள்கையிழந்த
சாடையறிந்தாள்வெளியேதள்ளினாள்—சேடியரின்
முன்கடுகிவந்தொருத்தி மூட்டினாள்மற்றொருத்தி
பின்குடுமிதன்னைப்பிடித்திழுத்தாள்—வன்கொடிய
நக்குவாய்க்காலகடி நாய்தனையுஞ்சூழவிட்டாள்
பொக்குவாய்நாயும்புகுந்ததே—திக்குவே
றில்லாமற்றன்னொழுக்க மெல்லாந்தவறிமனப்
பொல்லாவிலாய்க்கொண்டுபுண்ணாகிப்—பல்விழித்து

## விறலிவிடு தூது.

ராமய்யனென்றுசொன்ன நாதிப்பேர்பூதிமங்கி
யூமையனென்றுபேருண்டானான்—மாமனதும்
பேதகமாவிங்கே பிறந்தகோலத்துடனே
பாதையிலேபோரானீபார்க்கலையோ—வீதல்லா
லப்புவையன்போய்ச்சேர்ந்தா னன்றுமுதலின்றுவரை
வெப்புவையனானான்காண்வேதியரே—கப்பலூர்ச்
சங்கரையன்போய்ச்சேர்ந்தான் றுலிவிற்றுக்கூறைவிற்றுப்
பங்கரையனானான்காண்பாவலரே—வெங்களூர்
பாற்கரையன்போய்ச்சேர்ந்தான் பாழேகிரந்திகொண்டு
மூற்கரையனானான்காண்முன்னவரே—மாற்கமிலாப்
பேரிப்படிமயங்கிப் பேய்கொண்டலைந்தவர்க
ளூருக்கூர்மெத்தவிந்தவூரிலே—பாருமையா
இந்தாவொருவ னிளைக்கிறான்சந்தியிலே
அந்தாவொருவனலைகிறான்—கொந்திமன்னன்
வல்லிகிட்டப்போய்த்திரும்ப வந்தானுவுள்ளதெல்லாஞ்
சொல்லிவிட்டேனென்பேரிற்றோசமில்லை—கல்வியுள்ள
ஞானியையன்சொன்னபுத்தி நாடிநடவாமலவ
தானியையன்போனதுவுந்தானறிவீ—ரானதனு
லிவ்விதமாய்த்தேடியுண்ணு மேந்திழையாள்வாழ்மருதூர்க்
கெவ்விதம்போவீர்வருவதெவ்விதங்காண்—சொல்லீரென்

### சோடசவதானி மருதூர்சென்றமை

### கூறல்.

றுரியந்தேர்ந்தகுரு வையர்புத்திசொல்லநல்ல
காரியந்தானென்றிரண்டுகைகொட்டி—வீரியமாய்
அங்கேகைகத்திங்கே யந்தப்பாம்பாடாது
பொங்கியபானெஞ்சிற்புரையுண்டா—தங்காட்டை
விட்டுப்புலிபசித்தான் மீண்டுபுல்லைத்தின்னுமா
பட்டுமறியேனாகற்பாறையிலே—நெட்டுமுளை
கைக்கடிசாலேறுமா கட்டுமெழுகுப்பாவை
யக்கினிப்பந்தலுக்குள்ளாடுமா—மெய்க்குமுன்னே
நிற்குமாபொய்யும் நிறைகுடந்தளும்புமா
பிக்கிலுடம்பறியாப்பேயாட்டா—எக்காலுந்
தன்னெஞ்சறியாப்பொய் தானுண்டோபோம்போம்நீ
ரென்னெஞ்சறியீரெனவுரைத்தேன்—சொன்னேனான்
பட்டறிகேட்டறி பத்தஞ்சிறுத்தறியேன்
றெட்டிவந்தார்புத்திசொன்னாரென்பிறகே—கட்டளையாய்

பொன்மேனிநெல்விளைவு பூத்தவயல்வளஞ்சூழ்
றென்மேனிதாண்டிவையைநீராடி—நன்மதுர

வெல்லங்கடந்தமதன் வின்மகவான்வில்லைமுட்டும்
வல்லங்கடந்துவழிக்கொண்டு—மெல்ல

இருமருதூடேநடந்தா னிந்திரன்விண்போற்றுந்
திருமருதூருக்கருகேசென்று—வரமுதவு

மாகதீர்த்தம்போலிம் மண்டலத்திற்பண்டுதித்த
நாகதீர்த்தம்புகுந்துநான்படிந்து—சேகரமாய்

சந்தியமந் தவறாமலேமுடித்துச்
சிந்தைபுலன்சென்றவழிசெல்லாமற்—பந்தித்துப்

பொன்னார்சேவடியைப் போற்றிசெய்துசன்னிதிக்கு
முன்னாகவந்துநந்திமுன்பணிந்து—பன்னுமறைக்

கஞ்சரத்தைமுன்புபெற்ற கண்மணியைவெண்மருப்புக்
குஞ்சரத்தைக்கண்டுகையாற்கும்பிட்டு—மஞ்சுதொடுங்

கம்பமெதிர்வந்துதென்றற் காலிருக்குங்குன்றையொரு
கும்பனுக்குத்தந்தகுணக்குன்றை—இன்பமுற

ஆகம்பசந்த வழகியநாயகியோர்
பாகஞ்சுமந்தபரஞ்சுடரை—மோகமுள்ள

தொண்டருள்ளத்தேவிளங்குந் தண்டாமணிவிளக்கை
யண்டருக்குந்தேடறியவாரமுதை—முண்டகத்தாள்

நித்தந்துதித்துமுத்தி நீணெறிசேர்மூவரன்புச்
சித்தந்தழைத்தசிவக்கொழுந்தை—முத்தமிழின்

பண்காட்டியந்தாதி பாடியமெய்த்தொண்டனுக்குக்
கண்காட்டியாண்டுகொண்டகண்ணுதலை—மண்காணத்

தாய்பேசுபேசென்று சாற்றினும்பேசாமூங்கை
வாய்பேசச்செய்தமகாமந்திரத்தை—மீயுலவும்

வில்வத்தின்பான்முளைத்து வேதமுதலாய்க்கிளைத்த
செல்வத்தைக்கண்டுதெரிசித்து—நல்லதெய்வ

வாரணத்தைத்தோய்ந்தமத வாரணத்தையோர்மருப்பு
வாரணத்தையீன்றபிடிவாரணத்தை—யாரணத்தாய்

எனப்பாகாழிவள ரென்னப்பாவுண்ணப்பா
ஞானப்பாலென்றாட்டுநாயகியை—வானிறைஞ்சுந்

தன்பதத்திலேற்றிமலர் தானருச்சிப்பார்வணங்கு
முன்பதத்திலேற்றிவைக்குமுக்கனியை—யன்புத்தேன்

ஊற்றிருக்குமெய்யடியா ருள்ளமலராலயத்தில்
வீற்றிருக்குஞ்சோதிவிளக்கொளியை—நாற்றிசைக்கும்

அன்னைமருதா ரழகியநாயகியைச்
சன்னிதிமுன்னின்று தரிசித்தேன்—அன்னேரம்

## மோகனமுத்தைக்கண்டுமருண்டமை

### கூறல்.

மாகனகமண்டபத்தில் வந்துநிற்கும்போதுகண்டேன்
மோகனமுத்தென்னுமொரு மொய்குழலை—யகநுதல்
வில்லழகும்பாய்ந்தவிழி வேலழகுங்காலழகுஞ்
சொல்லழகுமாலையிட்ட தோளழகும்—பல்லழகும்
கையழகுமார்பழகுங் காதழகுமூக்கழகு
மெய்யழகுங்கண்டவுடன் மெய்மறந்தேன்—வுய்யாச்
செப்புமுலைகண்டு தெரிசித்தேன்றீவாயி
லொப்புமுலைவாய்மெழுகா யுள்ளுடைந்தேன்—கொப்பிலங்கும்
கட்டழகிவள்ளைமனாக் காதுகண்டேன்காதைவலைத்
தட்டில்விழுந்தாபபோற் றட்டழிந்தேன்—இஸ்டமின்னால்
வாய்ந்தமயற்குள்ளாய் மதயானைபோயளறு
பாய்ந்தகதைபோலே பதைபதைத்தேன்—காந்திமணிச்
சங்கந்தரித்தசெங்கைத் தாமரைகண்டேன்மேனி
யங்கந்தரித்தநெற்போ லாகினேன்—கொங்கையென்று
கல்லையோபண்ணிவைத்தான் கஞ்சனிவளுக்கிடையு
மில்லையோவென்றுமனத் தெண்ணினேன்—சொல்லியசங்
கீதத்தைப்பாடினான் கின்னமுலைப்பேதையவள்
பாதத்தைப்போய்ப்பிடிக்க பார்த்திட்டேன்—கோதற்ற
தேன்பிறக்தசொல்லாளைச் சேரமனும்வீணாக்
கேன்பிறந்தோம்பூமியிலென் றெண்ணினேன்—மான்போல்வாள்
சேல்வைத்தகண்ணைச் சிமிட்டினாள்மங்கையிதென்
மேல்வைத்தபார்வையென்று மெச்சினேன்—கால்வைத்து
மத்தளத்துக்கொக்கவடி வைத்தாளுண்மெய்மரந்து
தத்தளத்துக்காலசந்து தட்டழிந்தேன்—தித்திகுழல்
கைத்தாளத்துக்கேர்க்கக் கைபிடித்தாள்காமனெனை
யத்தாளம்போடும்வகை யாயினேன்—றத்தைவெகு
முத்துமுத்தாயாடினாண் மொய்குழலாள்சூழவொரு
சித்தரம்போற்றன்மனைக்குட் சென்றிட்டாள்—புத்திசொல்லி
யொக்கவந்தவேதியரை யுள்ளேகற்றூண்மறைவுப்
பக்கத்தில்விட்டுமெள்ளப் பம்மினேன்—வக்கணையாய்
அய்யர்சொன்னபுத்தியெல்லா"மானைவாய்த்தின்கரும்பாய்க்
கைதவரிக்கொட்டுங் கமர்ப்பாலா—யையையோ
கீரையாய்மாவடுவாய்க் கெட்டபுளிச்சாறாய்க்
கார்கடலிலேகவிழ்ந்த கப்பாலா—யேருழுத

## ஏவற்பெண்களுபசரித்தமைகூறல்.

கள்ளிருந்தகூந்தலிடங் கன்னிகொண்டுபோய்க்கொடுத்தாள்
உள்ளிருந்துவந்தார்களொன்பதுபேர்—மெள்ளவென்னை
வர்துநின்றுகும்பிட்டார் வாழ்த்தினார்வாருமென்றார்
சந்தடிவிலக்கினார் தாக்கினார்—முந்தியொரு
சுப்பியடப்பம்பிடித்தாள் சோமிபடிக்கம்பிடித்தாள்
குப்பிமுன்னேகைவிளக்குக் கொண்டுவந்தாள்—அப்பாலு
மாரிகைலாகுதந்தாள் வள்ளிநடைபொத்தையிட்டாள்
வீரிவெட்டிவேர்விசிறிவீசினாள்—ஓர்புரத்திற்
பொன்னிசெப்புகொண்டுவந்தாள் பூரணிபன்னீர்தெளித்தாள்
சின்னிகுஞ்சம்போட்டாள்ஜெயஞ்சொன்னாள்—அந்நேரம்

## மனைக்குட்சென்றிருந்தமை கூறல்.

கப்பற்கவிழ்ந்ததுபோற் கானவலைவெம்புலிபோற்
கொப்பத்திலேவீழுங்குஞ்சரம்போற்—றப்பாமல்
வட்டில்விழுஞ்சிட்டுப்போ லோடிவிளக்கில்விழும்
விட்டிலைப்போல்நானுமவள் வீடுசென்றேன்—கட்டுமெட்டாய்
அண்டமுகட்டை யளாவுமணிமண்டபத்திற்
கண்டுவிரித்தரத்னக்கம்பளத்தில்—திண்டொரு
பாசாங்காய்ப்போட்டுவைத்தார் பையவிருவாய்நடந்து
ராசாங்கமோடியாய் நானிருந்தேன்—கூசிநடந்

## மோகனமுத்துகண்டு உபசரித்தமைகூறல்.

தாணிப்பொன்மோகனமுத் தன்றிரண்டுதேங்காயுங்
காணிக்கைகொண்டுவந்து கையெடுத்தாள்—நாணித்தான்
நின்றாள்தலைகவிழ்ந்தா ளோர்வாரவுங்கூசினாள்
ஒன்றுமறியார்போலொதுங்கினாள்—அன்றுதட்டிற்
கொஞ்சஞ்சிரித்துக் குனிந்துவாய்பொத்திமன
தஞ்சியொதுங்கியடுத்துநின்று—வஞ்சகமா
யென்னைமுகம்பார்த்துருகி யென்சாமியும்மைநான்
சன்னதியிலாடையிலே தான்கண்டேன்பொன்னியைவிட்
டுக்கூடிவாவென்றே னும்மையெங்குங்காணோம்
அக்கக்காவெட்கக்கே டாவிதென்ன—பக்கமா
தூரமாகாதமா சொந்தம்நீரிங்குவந்தால்
ஆருந்தடுப்பாரா அப்புறத்தில்—நீர்நிற்க
வேண்டியதென்னவிந்த வீடுநமக்குவேற்றுமையா
ஆண்டவர்நீர்நாங்களுமக் காளடிமை—பூண்டிருக்கும்

பாக்கியமெல்லாமுமது பாக்கியமேயெங்களுக்கு
நாக்குழக்குங்கொடுத்தநாதனே—யோக்கியமென்
சாமிவலுவுண்டு சலுகையுண்டுவாய்ச்சொலவு
மாமாமாவென்கிதுகாணையோ—சீமையிலே
கண்குளிர்ந்தமாப்பிள்ளையைக் கண்டணைந்தபெண்களல்லோ
பெண்களொன்றுசாலமெல்லர்ப்பேசினாள்—எண்காணாக்
கள்ளங்கரையில்லாக் காந்தாரிபெற்றமகள்
வுள்ளங்கரையவுருகினாள்—எள்ளளவுங்
கல்லார்போலந்தவஞ்சக் கன்னிசொன்னபொய்ப்பாசாங்
கெல்லாநிசமென்றே யெண்ணிவிட்டேன்—வல்லியென்னை
யெத்துகின்றவஞ்சமறி யேன்றேவைக்காரனுக்குப்
புத்திகொஞ்சமென்றகதை போலானேன்—தத்தைமொழி
கையைப்பிடித்திருத்திக் கண்குளிரணைப்பார்த்தேன்
பையச்சிரித்தரைக்கண் பார்வையிட்டுக்—கையிலே
வீணையெடுத்தாளிசையை மீட்டினாண்மூடர்மன
வீணையெடுத்தாள்விழியைவீசினாள்—கோணாமல்
நாகேசர்மேற்பதமும் ராமேசர்மீதுதேன்
பாகேபோற்கீர்த்தனையும்பத்தியமும்—சேகரமாய்ச்
சோதிவடிவேலர்மேற் சொன்னவண்ணத்துறையு
நாதர்மங்களேசர்பதநற்றெலுங்குஞ்—சேதுபதி
தேவைத்துரையென் சிவசாமிமன்னவன்மேற்
கோவைத்துறையுங்குயிலிசைபோல்—நாவிசைய
கானவிசைகாட்டிக் கண்காட்டிப்பண்காட்டிப்
பன்மொழியாள்நானுருகப்பாடினாள்—மானரசை
இச்சையுடன்கொண்டாடி யென்னூறுபொன்பெறுமோர்
வச்சிரமணிமாலையவள்மார்பிலிட்டேன்—அச்சணத்தில்

## தாய்க்கிழவிகண்டு பசரித்தமைகூறல்.

தோப்பைமுலையுஞ்சுரித்த சொள்ளைமுகமுங்கிழட்டு
மூப்புவறட்டுடலுமூக்காடுஞ்—சாய்ப்புங்
குணுகுணுத்தமூக்குங் குறுகுறுத்தகண்ணு
முணுமுணுத்தவாழமேன்மூச்சுங்—துணிவளைத்து
நீட்டுங்கழுத்து நெழிப்புமெலிச்செவியும்
போட்டபுகையிலையும்போழ்வாயுங்—காட்டித்
தடிக்கம்புமூன்றித் தலையும்நடுக்கி
யடிக்கடிகால்தூக்கித் தள்ளாடிக்—கிடுகிடென்று
கூனிக்குறுகிக் குமட்டித்தோல்வற்றிநரைச்
சூனைவயிற்றுத்தாயுந்தோன்றினாள்—மாண்மயிரைக்

கொத்தையார்பஞ்சைசனிகர் கூந்தலாரோமக்கும்
அத்தையாராமென் றறிந்துகொண்டேன்—எத்தியென்னைத்
த்துறையே தமிழ்க்கடலோன்பெற்ற
மங்கைக்குயிரேநீர்வந்தீரோ—எங்களைநீர்
தே வரவெங்கள்முன்னோர் செய்தவமோவல்லதிந்த
வீடுசெய்தபுண்ணியவிசேடமோ—நாடிநான்
செய்தநன்மைதானோ திருவுளசகாயமோ
தையலிவள்செய்ததவப்பலனோ—ஐயர்சொன்ன
சோசியமும்ராக்கண்ட சொற்பனமுமேலாந்தை
வீசியதுஞ்சோதிவிளக்குப்பொறியும்—பேசும்
வனக்குறத்திசகக்குறியும் வள்ளுவனார்சொல்லும்
உனக்குநல்லமாப்பிள்ளையுண்டாகும்—எனச்சொன்னேன்
மவிழிக்குச்சொன்ன மறுநாளேயெங்கள்குல
ய்வம்போல்வந்தீரேசேயிழையைக்—கைதவற
விட்டுவிடாதையும்பின் வேறுகதியில்லையென்
கட்டழகிக்கும்மிடமேற்காதன்மெத்த—எட்டிரண்டு
சொன்னாலுந்தோற்றாது சூதுதெரியாள்பலவீ
டின்னமறியாள்வினயமேதுமில்லைச்—சின்னவய
சன்னமிதுவரைக்கு மாண்பூடுகண்டறியாள்
நன்னியழியாப்பருவகாலமிது—பின்னுமனக்
கள்ளமறியாள்கபடறியாள் பொய்யறியாள்
எள்ளளவுங்கைப்பொருள்மே லிச்சையில்லை—அள்ளிச் சோ
றுண்ணத்தெரியாதே யும்மிடத்திற்கூசாமல்
வண்ணத்துரைச்சிகிட்டவந்தாளா—பெண்ணுமது
கம்பளமுஞ்சேர்ந்தாளா கண்விழித்துப்பார்த்தாளா
செப்பதுமவாயுந்திறந்தாளா—மின்போல்
மருங்கிலையென்றாலு மருவியுமைக்கூட
மருந்துண்டுநேர்பட்சம்வைத்தாற்—றருந்தருவோ
பெண்ணாபிரங்கோடி யிந்திரன்வந்தாலுமினிக்
கண்ணாலும்பாராள்கனவினிலும்—பெண்ணுடனே
பூவுமணமும்போற் புகழ்தருவுஞ்சீடனும்போற்
சீவனுங்கூடும்போற் றினங்கலந்து—மேவிப்
பதிர்வாழநீங்கள் பெருவாழ்வுவாழ்ந்து
பதினாறும்பெற்றுப்பலிக்கி—தமிருங்கள்
இன்னார்க்குமாமியிவ ளென்றுலகிலாருமென்னைச்
சொன்னாலதுபோதுஞ்சொற்பமோ—மன்னவரே
தேகவடிவாளிவளைச் சேர்த்திருநீரென்றுசொல்லி
மாகவடிபின்னுக்குவாங்கினாள்—போகையிலே

கன்னிக்குச்சற்றேகண் காட்டினாள்சாடைகண்டு
தன்னிச்சையாய்நடந்தார்தாதியரும்—என்னைப்பார்த்

## பள்ளியறைச் சிறப்புக்கூறல்.

துள்ளறைக்குள்வாருமென்று சொன்னநுதலாள்பின்போனேன்
வெள்ளிவட்டத்தூணிறுத்த மேன்முகப்போ—பள்ளியறைத்
தூங்குமஞ்சப்பத்தியோ சொர்னமணிமண்டபமோ
தாங்குநவரத்னமிட்டசட்டமோ—ஒங்கியமேற்
கட்டியோதிண்டுதலை காணியோகண்ணாடிப்
பட்டமோதங்கப்படிக்கமோ—கொட்டகையில்
ஒத்திருக்குங்கம்பளமோ வுப்பரிக்கைமேடையோ
வைத்திருக்குந்தூண்டாமணிவிளக்கோ—சித்திரமா
யொன்றுகைலாகுதர வொன்றுவழிகூட்டிவர
ஒன்றிருகையேந்தியுபசரிக்க—ஒன்றுமனச்
செம்மைபண்ணியென்னைரத்னச் சிம்மாசனத்தில்வைக்கப்
பொம்மைபண்ணிவைத்தபுதுமையோ—அம்மதிற்கான்
மேலெழுதுஞ்சித்திரத்தேர் மின்னாளைக்கூனைவைத்து
நாலுபேர்செய்யுங்நடத்தையோ—காலிரண்டுந்
தாழப்பிழுந்திருக்குந் தையனிதம்பத்தொருவன்
வாழைப்பழஞ்சுவைக்கும்வாஞ்சையோ—யேழுபெண்கள்
சில்லாய்ந்தநாகபடந் தீட்டவொருபாழறுவான்
மல்லார்ந்துசாய்ந்திருக்குமார்க்கமோ—சல்லாமேல்
ஒரொருத்தராய்க்கிடத்தி யொன்பதுபேருக்கொருத்தி
கோளத்துலீலைசெய்யுங்கேலியோ—நேர்கண்

## தாய்க்கிழவிவாவிட்ட வரிசைகூறல்.

பாழ்ந்தடத்திலேதவறிப் பாரப்பொதியெருது
வீழ்ந்ததுபோற்சப்ரமஞ்சமேற்படுத்தேன்—ஏந்திழையார்
வள்ளத்திற்சந்தனமும் வாசமருக்கொழுந்தும்
வெள்ளிக்கமலத்தில்வெள்ளிலையும்—புள்ளிநிற
வண்ணப்பீங்கானின் மணத்தசபாதும்புழுகுங்
கிண்ணத்திலேலங்கிராம்புகளும்—உண்ணப்பால்
பைங்கனியுந்தண்ணீரும் பன்னீரும்வெந்நீரும்
கொங்குமலர்ச்செண்டுகளுங்கொண்டுவந்தார்—இங்கேயென்
சாமிதரவிட்டகுறை தானென்றேயுங்களுட
மாமிவரவிட்டவரிசையென்றாள்—ஆமாமென்
றெண்ணுமுன்னேஆத்தைசரு ளென்றொருத்திவைத்துப்போனனெல்
கண்ணுமுன்னேவைத்திரண்டு கைதொழுதாள்—பெண்ணழகி

மிஞ்சியபனம்பழம் விரிந்ததுசிவந்தென
நெஞ்சறிவயர்ந்திட நெருங்கவுயர்—பஞ்சணையின்
மஞ்சணைந்துவணைடிட மருங்குதுறுநடுங்கவிழ
யஞ்சனமழிந்திட வணிந்தவளை—யுஞ்சிதற
மென்குழலவிழ்ந்திட மிகுப்பரதிசம்பெருக
நன்கலவைசந்தன மணந்தரவு—டன்குலரி
தண்டைகள்சிலம்புகள் சதங்கைகள்புலம்பமலர்
விண்டுதிரவெண்புளொலி மிஞ்சவெயர்—வொண்டரணி
சிந்தவிசைகொண்டென திண்படியிணங்கவெதிர்
வந்துமதமென்புனல் வழிந்தணைமி—தந்திடவே
பாயுமொருபாற்கடலிற் பாவைகடிகடந்தான்
சாயுமணந்த சயனமா—யாயாச
யோகநித்திரைகொண்டோ மொருநாழிகைக்குமேற்
சேகரமாய்ச்சோபத் தெளிவானேம்—வாகா
யெனதுகம்பிச்சோமமெனடுத்தொருமுந்தானை
தனையிடுக்கிப்போய்க்கதவைத் தள்ளிப்—பனிமொழியாள்
போனாளவள்பிறகே போனேனுன்வெந்நீராற்
றூனைகபோகந் தனைத்துடைத்தோ—மானாளும்
நானுந்திருபபிவந்தோம் நங்கைமடிமேற்சாய்ந்து
தானிருகையாலென் றலைவளைத்து—மேனோக்கி

மோகனமுத்து தன்னைப்புழ்ந்தமை கூறல்

யாவிமுத்தமிட்டுமைப்போ லாரிப்படிக்கலவி
பாவிப்பார்மன்மதனும் பற்றுதே—தேவரீர்
அல்லசலினியொருவர்க் காசையுண்டாநட்சத்திர
மெல்லாம்நிலவுக் கிணையாமா—வில்லைவட்டு
வெல்லக்கரும்புதின்றோர் வேப்பங்காய்தின்பாரோ
எல்லைப்புவிமே லிருக்குமட்டும்—நல்லபுது

புணர்ச்சிவருத்தப்போக்கின்மை கூறல்

மாப்பிள்ளைநீரென் மகனி வர்க்கமற்றசிற்றானுஞ்
சாப்பிடுவமன்றாட்டியுப சாரமிட்டாள்—பார்ப்பானுன்
உண்ணப்பின்வாங்குவனு யுண்டேமறுபடியும்
எண்ணத்தொலையாதே யென்கலவி—பெண்ணரசே

விடிந்தபின் தன்செய்தி கூறல்.

பாதிசொல்லவானாலும் பத்துநாட்செல்லுமினாப்
போதுவிடிந்தாருணிக்கப் போனேனு—னுதனைப்

## விறலிவிடு தூது.

பைந்துழாயென்றே பறித்தேன்றருப்பையென்றே
யந்துவிழுங்கோரைமுடி யள்ளினே—னிந்தமட
மான்முழுக்குநாளும் மருவவரந்தாருமென்று
நான்முழுகநாகசுனை நண்ணினேன்—மேன்மைமீ
ராடினேன்செம்பைமறந் தப்பாற்போய்மீண்டுவந்து
தேடினேன்காணேன் றிரும்பினேன்—நாடிவருஞ்
சூத்திரரைக்கண்டாற் றொழுதேன்பிராமணரைப்
பார்த்தாசீர்வாதமென் றப்பாலேகி—யாத்திரமாய்
வன்னமுத்துப்பல்லாளை வந்துகண்டேன்சாமியுமக்
கன்னமுத்துவீட்டிலேயன்னமென்றாள்—சொன்னசொல்லைச்
சென்னிமேற்கொண்டு திரும்பியவளாத்தினிற்போ
யுன்னியிலைமுன்னுழக்காந்தே—னென்னெனமோ
வைத்தாளதெல்லாமென் வாய்க்கேவழங்கவில்லைக்
கைத்தேயிருந்ததுநான்கையலப்பித்—தத்தையைப்போய்க்
கண்டணைந்தேனாசைக் கடலாய்விளக்கில்வந்து
வண்டணைந்தாற்போலேமயங்கினேன்—சண்டாள

### தாய்க்கிழவி மருந்துகூட்டி தன்னை மோசஞ்செய்வ

### மூலிகைசேர்த்தமை கூறல்.

மைமயக்குக்காரியுந்தன் மாதாவுங்கூடியென்னைக்
கைமயக்குச்செய்யக்கருவெடுத்தார்—செய்மருந்தில்
மின்னிக்காய்மாங்காய் விளங்காய்புல்லாமணக்குக்
கன்னிக்கிழங்குவெருகங்கிழங்கு—புன்னைக்காய்
காட்டுளிக்கிழங்கு கருவாழைச்சல்லிவேர்
காட்டுப்பாகற்காய்கருநாவி—யாட்டுக்காள்
முள்ளிமுருக்கம்பூ முட்குறண்டிவெப்பாலை
வெள்ளரளிசெவ்வரளி வெள்ளறுகு—வள்ளி
முருக்கரிசிவேப்பரிசி முத்துமல்லிநெல்லிப்
பருப்புகளாச்சிப்பருப்பு—மருக்காரைச்
சுண்டைகருவேற்கொழுந்து தோதகத்திபோதகத்தி
தொண்டைசிறுகீரைசுடுதூரத்தி—பிண்டு
முடக்கொத்தான்மாவிலிங்கை முன்னைபுளிய
மடற்குரண்டைபாம்புவணங்கி—கிடைப்பூக்
கரிப்பானிலைச்சாறு கற்றாளஞ்சோறு
பருத்தியிலைச்சாறுபனாட்டு—மருக்கொழுந்து
மத்தங்காய்வெள்ளரி மருமத்துச்செவ்வகத்தி
கொத்தவரைபச்சைசங்கங்குப்பிவேர்—அத்திமொக்குக்

தேவேளைவெட்டிவேர் தான்றிகொடிவேலிவேர்
ஐவிரலிகுன்றியவுரிதொயில்—செய்யாரை
யாடைதொட்டிசெங்தொட்டி யாமணக்குசின்னிவேர்
பாடவளைதும்பைபழம்பாசி—காடுமுட்டி
பேய்த்துவரைபேய்த்துமுட்டி பேய்வாளைபேய்மிதுக்கு
பேய்ப்பாகல்பேய்க்குமட்டிபேய்மருட்டி—நாய்க்கடுகு
தொட்டாற்சுருட்டிதொட்டாற் சுண்டிதொட்டால்வாடியல்லி
நெட்டிவெள்ளைக்குன்றிநிலம்புரண்டி—யெட்டி
மனமடக்கிக்கொண்டான் மயக்குதிகைப்பூடு
பனைபிரியாநங்கைபசலி—சுனையறுகு
வேம்புமேற்புல்லுருவி வேலாமேற்புல்லுருவி
மாம்பூநெறிஞ்சிப்பூமாதுளம்பூ—சேம்பூ
திருகுகள்ளியெல்லாந் திருட்டுக்கிழட்டுத்
திருகுகள்ளிகொண்டுவந்துசேர்ததாள்—பரிவாய்ப்

## கடைச்சரக்குச்சேர்த்தமை கூறல்.

பொரிகாரம்போரத்தை பூலாங்கிழங்கு
கரியபவளங்காசுக்கட்டி—கெருடபச்சை
கட்டுபுக்கஸ்தூரிக் கன்மதங்கற்பாசிநவ்வற்
கொட்டைகோரோசனைகோதும்பையரிற்—கட்டையரி
தாரம்செந்தூரஞ் சாதிலிங்கமிஞ்சிகட
லாரையூசிக்காந்தமக்ராணி—கார்போகி
பாசாணம்நேர்வாளம் பச்சைகற்பூரஞ்சூடன்
நேசாபுரநதுருசுசெண்பகப்பூ—மாசக்காய்
தேவதாரங்கடுகு சென்னைவிவான்மிளகு
சாவற்பூசெந்திசவுக்காரம்—பூவழலை
சித்திரமூலஞ்சாரஞ் சீனக்காரங்கோட்டந்
துத்தஞ்சிறுதேக்குச்சுக்கரக்கு—வெங்காரந்
திப்பிலிகற்றைக்காம்பு சித்திரத்தைசீனிசத
குப்பைமஞ்சட்பாஷாணங்குங்கிலியஞ்—செப்பி
லுருட்டுமுண்டைமாத்திரையு மோவாய்க்கிழட்டுத்
திருட்டுமுண்டைகொண்டுவந்துசேர்த்தாள்—மருட்டுவிழிப்

## பிராணிகளினுருப்புகள் சேர்த்தமைகூறல்.

புள்ளிமான்மூளை புலிநகஞ்சேப்போத்திறகு
கள்ளியடிச்செஞ்சூகைக்கண்பீழை—முள்ளெலிப்பல்
காக்கைக்கடைக்கண் கருநாகத்திக்கிரியக்
[illegible] —பேக்கை வாய்ப்

பெட்டைநாய்வால்பூனைப் பின்றட்டுக்கூகைமுகம்
நட்டுவக்காலிக்காலோணாய்முகரை—யட்டையுடல்
கட்டெறும்புப்பின்வால் கரிக்குருவிவான்முசுரு
முட்டைக்கருங்காடிமுன்வாய்ப்பல்—ஒட்டகைபபால்
ஆட்காட்டிப்பித்து மாடப்புறுவெச்சமனைத்
தேட்கொடுக்குப்பேயனுடற்சிக்கமுக்குத்—தாக்கும்
பொலிப்பெருதுப்பீசம் புளுகுபூனைத்தோல்
எலிக்கொசுகிரத்தமுள்ளானெச்சங்—கலையலகு
கொண்டலைத்திநாக்கு குரைக்குடலாந்தை
முண்டவிழிவெளவான் முதுகுத்தோ—னண்டோடி
கீரிச்செவியரணை கீழ்வாயலகுகிழட்
டோரிமுதுகுகாட் டோணன்பல்—தேரைவான்
மான்முதுகும்பச்சை மயின்முதுகும்பொக்கிழட்டுக்
கூன்முதுகுத்தாய்க்கிழவி கொண்டுவந்தா—ளூன்மருந்தை

## மருந்து கூட்டினமை கூறல்

யானைக்கண்டாழியிலிட் டாறுநாளூறவைத்துக்
கானப்பெருமருந்தைக் கண்டித்துத்—தேன்விட்டுக்
கட்டுங்கடைமருந்திற் கள்ளைக்கலந்தபினை
யிட்டுத்தைல மெடுத்திறக்கி—யொட்டுக்குத்
தள்ளிப்புடம்போட்டுச் சத்தெல்லாம்வாங்கியிரா
வெள்ளியெரிந்துவிழும் வேளையிலே—கள்ளமகள்
பல்லழுக்குநாவழுக்குப் பாவிதலையழுக்கும்
அலகுலழக்குமதில் மத்தித்துங்—கொல்புலிப்பாற்
கள்ளிப்பாலான்பல் கருப்பிமுலைப்பால்கூட்டி
யள்ளியம்மிமேல்வைத் தரைத்துருட்டிக்—கொள்ளிவாய்க்
கன்னிலிதன்மகளைக் கண்காட்டியிந்தமருந்
தென்னமோவென்றுநீயெண்ணாதே—முன்னமே
கொந்திமன்னன்வாழ்வைக் குலைத்ததிதுதாசிகளுக்
கிந்தமுறைதாண்டியென்மகளே—வந்தவரைச்
சொல்லையடியாயடித்துச் செம்பொனெலாமோயாமற்
கொள்ளையடியென்றுகொடுத்திட்டாள்—கள்ளச்
சிறுக்கியதைவாங்கியொரு செப்பிலேமூடி
யிறுக்கியெனக்கப்பளத்திலிட்டாள்—மறுத்தவலிற்

## ஔஷதப்பிரயோகஞ் செய்தமைகூறல்.

பார்த்திட்டாள்வாழைப் பழத்திலிட்டாள்மாப்பொடியிற்
சேர்த்திட்டாள்நானதெல்லாந் தின்றிட்டேன்—ரேர்க்கிரகாள்

## மதிமயக்க மிருந்தமை கூறல்.

எல்லாமறந்துவிட்டே னெவ்வளவுஞ்சோற்றிரக்கஞ்
செல்லாதுகண்ணூரக்கந்தேடாது—வல்லியிடந்
தள்ளாட்டங்கொண்டு தவறிதிருகணிக்கு
ளெள்ளாட்டுஞ்செக்கினெருதானேன்—வள்ளம்போல்
வல்லார்முலைக்கு மரிவாசற்படிநடக்குங்
கல்லாய்க்கிடந்துகரைந்துவிட்டேன்—வல்லிவாய்த்
தம்பலத்தைத்தின்பதல்லாற் சாமிதிருக்கோயி
லம்பலத்தைநான்கண்டறிந்ததிலலை—வம்பிதுடை
நாகதரிசனமோ நான்கண்டதல்லாது
நாகதரிசனத்தைநான்காணேன்—மோகமுள்ள
நாயகியைத்தெண்டனிட்டே னல்லாலழகிய
நாயகியைத்தெண்டனிட்டு நானறியேன்—தீயாள்
அவதானம்பார்ப்பதே யல்லாமனுன்செய்
யவதானம்பார்ப்பாரறியேன்—சிவனே
குலதெய்வமென்றவனைக் கும்பிட்டதல்லாற்
குலதெய்வங்கும்பிடவுட்கொள்ளேன்—கலைமொன்றை

## வஞ்சிக்க உபாயஞ்செய்தமை கூறல்.

எண்ணினுள்கூனி யிதுகண்டாற்கேட்பாளோ
வொண்ணுதற்குச்சொன்னுபாயத்தைப்—புண்ணியரே
நீரோடும்வாய்க்கா னெருங்குந்திருச்சுழிகைத்
தேரோடுதென்னூர் திருநாட்கு—நீருபபோய்
வந்தாலெமக்குநன்மை வாராதோவென்றுரைத்தா
ளந்தக்கணமேநா ணுமென்றேன்—பந்துமுலைத்

## திருவிழாவுக்குச் சென்றமை கூறல்.

தோகயுன்செய்தியென்ன சொல்லென்றேனும்மைவிட்டு
மாகாணிநாழிகையும் வாழ்வதுண்டோ—தேகமென்று
முத்தலையும்பல்லான் மொழிந்துகைபவ்வளவும்
பித்தலையாற்பூட்டியென்றனை பின்வந்தாள்—அத்தையரும்
கூடவந்தாரன்றெ கொடுமளூர்வந்துடையில்
னாடியசெவ்வேலைவள்ளி நாயகனை—யாடுமயி
லேறும்பெருமானை யன்பர்க்கின்பந்தருவானை
யாறுமுகத்தானையென்னை யாண்டவனை—நீறணிந்த
மெய்யானைச்சோதிவடி வேலானைப்பன்னிரண்டு
கையானையன்பருளங் கையானைப்—பொய்யரெதிர்
வாரானைத்தென்கொடுமூர் வந்தானைப்பூங்கடப்பந்
தாரானைத்தண்ணருளைத் தந்தானை—நேராகக்

கண்டெதிரேநின்று கருத்துருகிக்கைகுவித்துத்
தெண்டனிட்டுவாழ்த்தித் திரும்பினேன்—பண்டுபுத்தி

சொன்னகுருவேதமையர் சுக்கிரவாரத்துக்கோ
என்னகவைக்கோவங் கெதிர்வந்தார்—அன்னாள்

ஒதுங்கியொருபா லுடைமரத்துக்குள்ளே
பதுங்கினேனசென்றார்தன் பாட்டிற்—பிதுங்குமுலைப்

பொற்றொடியுந்தாயும் புறப்பட்டார்பாதையில்வந்
துற்றோந்திருச்சுழிகை யூர்புகுந்தோம்—முற்றுங்

கருமேனிநாயகனுங் கஞ்சனுங்காணாத
திருமேனிநாதர்பதஞ் சேவித்—தொருமனதாய்

நின்றோர்நிமிடத்தி னேரிசைவெண்பாக்கவிதை
யொன்றோதிவாழ்த்தினே னுள்ளன்பாய்த்—துன்றுந்

துணைமாலைவென்றகுழற் சுந்தரியென்னம்மை
துணைமாலைபாதந் தொழுது—மணமாலை

பட்டரையர்தந்தார் பணிந்திருகையால்வாங்கி
யெட்டிவந்தங்கோர்நா ளிருந்துவைத்தே—ஒட்டகையும்

பேரானையுமோர் பிடியானையும்போலே
யூர்நாடிவந்தோ முதையத்தில்—நேராய்க்

## திரும்பிவருகையில் தன்னை மோசஞ்செய்தமை கூறல்

கருதிப்பரம்பைநகர் கண்டுவைகையாற்றில்
வரும்பொழுதுமாது வயிற்றைப்—பொருமி

வலிக்குதொருசுக்குவா வேறுமென்றாணெஞ்சங்
கலக்கமுற்றுச்சென்றேன் கடையில்—விலைக்கொண்

டெடுத்துவருமுன் னகைக ளெல்லாங்கழற்றிக்
கொடுக்கிவிட்டுமுன்சென்றாள் கூனி—யடுத்துநான்

தபானென்கரிக்கட்டை போலநின்றாளேனென்றேன்
ரோனேவலிபோச்சுத் தாய்க்கிழவி—மானசே

வாபோகவென்றாளென் மாப்பிள்ளையைவிட்டுவரே
னீபோனாற்போவெனறே னீங்கினாள்—மாபாவி

கள்ளனிங்கேவந்தான் கனத்தநகையவ்வளவுங்
கொள்ளைகொண்டானென்றாளநான்—குப்புற்றேன்—மெள்ளக்

கொடியிடையைத்தேற்றினான் கூட்டிவந்தேன்கண்டாள்
கடினமனத்தாய்மகளைக் கட்டி—யடிநாச

காலிநகையெங்கேயென்றாள் கள்ளர்பறிகொண்டதென்றாள்
நீலவிருகையும் நெரித்திட்டாள்—மேல்வயிற்றைப்

## தாய்க்கிழவி பொய்ப்புலம்பல் கூறல்

பிச்சாள்விழுந்தாள் பிசைந்தழுதாள்தாரைவிட்டாள்
கைச்சாளுடைமைகொண்ட கள்வனுனை—நைச்சடித்துக்

கொன்றாலுங்கொல்வனே கொள்ளைகொடுக்கிறநா
ளின்றுநமக்கும்விதி யிப்படியா—நன்றுநன்று

பாவியிதோர்பேச்சுப் பழிப்பாச்சேதண்டியொத்த
தேவடியார்க்கெல்லாஞ் சிரிப்பாச்சே—பாவியிது

கொஞ்சநகையா குறைந்தபொருளாவென்
நெஞ்சந்தரிக்குமா நெட்டுரு—அஞ்சு

தனுமுறையாய்வந்ததல்லோகண்டாலியுன்றேட்
டுலையேறச்செம்புக்கா சுண்டா—பலவிதமாய்க்

கஞ்சாவுக்கிட்டாளோ கள்ளுக்குவிற்றாளோ
பஞ்சாப்பறந்ததோ பாவிநகை—கொஞ்சமா

அட்டியலுக்கொத்த அழகிதென்றேநான்பண்ணி
யிட்டமுத்துமாலை யிழந்தாயோ—தொட்டபுவிக்

காதரவாய்த்தென்முகவை யாளுந்திசிவகாமி
சேதுபதிசங்கரராந் தித்தினத்தில்—மாதேயுன்

நாட்டியத்தைக்கண்டு நவரத்னமயமாய்ச்சமைத்துப்
பூட்டுபதக்கங்கோடி பொன்பெறுமே—நாட்டிலிசைத்

தென்னவன்போல்வந்தமுத்துச் செல்வமகாராசனிட்ட
பொன்னரைநாணஞ்சுலெட்சம் பொன்பெறுமே—மன்னர்புகழ்

தாமோதரன்ராம சாமிமகாராசனிட்ட
கோமேதகமும்விலை கொஞ்சமோ—காமனிகர்

தண்டிகைக்கோமான்குழந்தைச் சாமிமகாராசனிட்ட
கண்டனிலைசொல்லக் கணக்கிலையே—முண்டகப்பூப்

பொன்மருவுமார்பன்வன்னி பூலாருசாமிதந்த
பொன்முருகுபோற்கிடைக்கப் போகுதோ—மின்மலர்க்கைத்

தங்கவளையேந்துந் துரைராமராசனிட்ட
தங்கவளைபோற்கொடுப்பார் தானுண்டோ—பொங்குமதி

மந்திரிசாமாவைய மானபரன்கல்லழுத்தித்
தந்தமணியோலை தான்போமே—சுந்தரவேள்

வெங்கிடசுப்பையரிட்ட வெண்முத்துமாலையைப்போல்
எங்கடசிப்போனாலு மெய்துமோ—பொங்குசெல்வ

மாகனவான்பார்புகழும் வாலகிஷ்ணமாய்கொடுத்த
மோகனமாலைக்கெவரு மோகமே—தோகையர்வேள்

திக்கரசர்கொண்டாடுஞ் சேஷயங்கார்முன்புகந்த
கைக்கடகம்போலுமினிக் காண்பேனோ—மிக்கசிவ

## விறலிவிடு தூது.

கங்கைநகராளுங் கௌரிவல்லரவந்தரணிட்ட
தங்கச்சரிக்குச் சரியுண்டோ—யிங்கிதமால்
எட்டமாசன்மகிழ்ந் திட்டகொப்புப்போலுமொரு
தட்டானறிந்து சமைப்பானு—நட்டுலகில்
ஆர்க்குமுபகாரி பரியலூரான்கொடுத்த
மூக்குத்தியார்க்கு முதலாச்சோ—தார்க்குழலாய்
நாமினியென்செய்வோ நமைமதிப்பாராரென்று
மாமிபுலம்பி மயங்கினாள்—காமிநான்

### பதிதாக நகைசெய்தமை கூறல்

பண்பாகத்தேத்றிப் பதினாயிரம்பொனெண்ணிக்
கண்பார்த்துத்தட்டான் கடைக்கிப்போய்ப்—பெண்பாவை
வாட்டமெல்லாந்தீர வகைவகையாய்நான்செய்து
போட்டழகுபார்த்துடம் பூரித்தேன்—கேட்டுமுலை
நீலிப்பறிபாதி நெட்டேரத்தட்டார்கைக்
கூலிப்பறிபாதி கொள்ளையிட்டார்—கோலமெத்தை

### ஆடைவாங்கிக் கொடுத்தமை கூறல்

மேலிருந்துநாங்கன் விளையாடும்போதுகிழ
நீலிவந்துபக்கத்தி னின்றுபையர்—சேலையெல்லாம்
வன்னமில்லைக்கோடியில்லை மாற்றவுடையில்லையென்று
சன்னிதிக்குப்போகச் சடைவேண்டி—பின்னே
நிறைந்தகுடந்தளம்பி நிற்குமோயார்க்கும்
பிறைந்தழயல்லாற் பின்னுண்டே—துறைந்திருந்தால்
நாணலென்னகோணலென்ன நாடறிந்தபார்ப்பார்க்கும்
பூணூலும்வேணுமோ போவென்றாள்—வேணதெல்லாம்
என்னிடத்திற்சொல்லாம லேனிருந்தாயென்றுடனே
தன்னியரைக்கூட்டிக்கடைக்குப்போய்—அன்னேரம்
ஈரஞ்சுணைரோச மில்லாக்கழுநீலிக்
கீரஞ்சுசேலையிலே யீரஞ்சு—பாரிலெண்க்
குட்டைக்கரைச்சேல கூறுமுழுப்பாதகிக்குப்
பட்டைக்கரைச்சேலை பன்னிரண்டு—துட்டக்
குரக்குச்சாயற்கிழட்டுக் கூனிபெற்றமூழிக்
காக்குச்சாயச்சேலை யாறு—மருட்டிப்
படக்குத்துங்கண்ணுட்குப் பஞ்சவர்னச்சாய
வடக்குத்திச்சேலையொரு வர்க்கம்—மடக்கூன்
குணக்கேடியீன்ற கொடுஞ்சூரக்கள்ளிக்
கணக்குடிச்சல்லாச்சேலை யஞ்சு—பணம்பணமென்

றென்னைக்கருக்கு ம்மக்கூனிபெற்றமகட்
கன்னக்கருக்கிலே யாறேழு—மின்னிப்
பசந்தகொண்டைச்சேலைப் பழிக்கும்விழியாளுக்
குசந்தகெண்டைச்சேலையிலே யொன்று—கசந்தமுற்றல்
வேம்புவர்ணச்சொற்கிழட்டு வீவிபெற்றபாவிக்கிப்
பாபபுவர்ணக்கண்டாங்கி பத்தெட்டுவீம்பைவென்ற
வெற்றிக்கம்பத்துமத வேழமுலைச்சேயிழைக்குச்
சுற்றுக்கம்பிச்சேலை சோடிரண்டு—முற்றுமன
வஞ்சத்துச்சல்லாப மாரீசக்கள்ளிக்குக்
கஞ்சத்துச்சல்லாவிற் கட்டிரண்டு—செஞ்சேல்
அயிற்கண்ணுச்சேயிழையா ளாச்சரிகங்கொள்ள
மயிற்கண்ணுச்சேலையொன்றும் வாங்கி—யுயர்த்தி
யடுக்கினேன்மங்கையுங்க ளத்தைக்கோவென்றால்
திடுக்கிட்டேன்மூன்றுசல்லாச் சேலை—யெடுத்தேன்
முலையுயர்ந்தமங்கையைத்தன் முன்கண்டசெட்டி
விலையுயர்ந்தவேடிக்கை மெத்த—நிலவுநுதற்
கிற்றினாள்தாயாங் கிழட்டொட்டகைமுதுகி
லேற்றினாள்வீட்டிற்போ யின்பமுற்றோம்—சோற்றுவட்டத்

## பல்வகைக்காகக்கொடுத்தமை கூறல்

தட்டென்றுஞ்செப்பிற் சவாதென்றுங்கொச்சிவர்ணப்
பட்டென்றுதங்கப் படிக்கமென்று—வட்டிலென்றும்
சீப்பென்றுந்தங்கச் சிமிழென்றுங்கைக்கிசைந்த
காப்பென்றும்வாடைக் கதம்பமென்றுஞ்—சாப்பிடநெய்
மீனென்றுங்குத்து விளக்கென்றுமானென்றுந்
தேனென்றும்பாலென்றுஞ் சீனியென்றுந்—தானையிலே
வன்னமென்றுமுத்தென்று மாணிக்கக்கல்வயிரச்
சன்னமென்றுநாட்குநாட் சாதகமா—யென்னை
வழிக்கட்டிக்கேட்பார்கள் வாரிவாரிப்பொன்
சிழிக்கட்டிகட்டிநான் கெட்டேன்—விழித்து

## தெய்வபூசைக்கிக்கொடுத்தமை கூறல்

வலைசுற்றும்கண்மருட்டி மாறியொருராவே
தலைசுற்றியாடிவந்தான் தையல்—வலியகிழட்
டோரிதலையாட் டொருபங்கினுமந்த
நாரிதலையாட்டு நாலுபங்கு—பாருமென்று
ரோன்கண்டுநிற்கையிலே நாடிவந்தாள்கூனியத்தை
நயன்கண்டகூறிதென்றே னெங்களிலோர்—மான்பண்டு

குன்னிதிப்பாய்ந்தமருட் காணுமென்றாள்மாயியிதற்
கென்னசொல்லுமென்றேன் மற்றேதுமில்லை—வன்னநிறப்

பட்டொன்றுவேலொன்று பன்றியொன்றுமாமுனிக்குத்
துட்டுத்தடியொன்று சோமனஞ்சு—கட்டுகருங்

கச்சையெட்டுச்சேவல்பத்துக் கப்பறைப்பூசைச்செலவு
பிச்சமொருகூலாடும் வேணுமென்றாள்—அச்சணமே

யென்னூறுபாடகல விந்தாபிடியுமென்று
முன்னூறுபொன்னை முடிந்தெரிந்தேன்—அன்னாள்

## தன்கையிருப்புத் திரவியத்தைவைத்திருக்கக் கொடுத்தமை கூறல்

அறிவையிடர்நான்கேட்டா லன்றுநீதாவென்
றொருவைரங்கையகல முண்டு—பருவி

உழக்குமுத்துமாயிரம்பொன் னுங்கொடுத்துவைத்தேன்
வழக்குமுற்றுமென்றறிய மாட்டேன்—முழக்கமுள்ள

## பலவகைக்கடன்தீர்த்தமை கூறல்.

பூதநரைக்கூனி பொடிசுகளைச்சிறியெந்தான்
சேதிதெரியாதா சிறிக்கிகாள்—ஏது
கரும்புரசனையென்று கண்டீரோவேண்டி
யிருந்தவிடமேவுதோ வேதுங்—தருப்படிக்கித்
தம்பியிடங்கேட்டாற் சரிப்படாதென்பளந்த
வம்பிகிட்டப்போயிவரை வைவானேன்—செம்பொனிதைக்
கோள்வாய்ச்சிறிக்கிகட்குக் கொட்டுமென்றுநான்கொடுத்தேன்
போழ்வாய்ச்சிறிக்கி புதையலிட்டாள்—நீள்கன்னன்
செம்புவில்லையென்றுவந்தான் சேலைவில்லையென்றுசெட்டி
வம்புசெய்தான்பொன்னெவ் வளவென்றேன்—தம்பி
யொருநூறுபொன்னென்று ளொட்டிக்கிரட்டி
யிருநூறுபொன்னை யெறிந்தேன்—அரிசிவிற்ற
நாரிவந்தாளுங்களுக்கு ஞாயமாவென்றாள்நான்
வாரியெறிந்தேன் வராகனெல்லாம்—வீரியமாய்
மீனூறுமாத்தைவில்லை யென்றொருத்திவந்தாள்
நானூறுரூபாயை நான்கொடுத்தேன்—மானுண்முன்
பட்டுநூற்காரன் பழையகடனென்றுவந்தான்
எட்டுநூறள்ளி யெடுத்தெறிந்தேன்—கட்டளையாய்க்
கள்ளென்றுவிற்றகடைக் காரன்வந்தான்பின்னுக்குத்
தள்ளென்றுமுப்பதுபொன் றான்கொடுத்தேன்—பிள்ளைநெற்றிச்

சுட்டிக்குவேணுமென்றாள் தோப்பைமுலைக்கிழட்டுச்
சுட்டிக்கிட்டேன்ரூபாய் தொண்ணூறுவட்டவெள்ளி
முக்காலிவேணுமென்றாள் மூழிக்காதுக்கிழட்டு
முக்காலிக்கீந்தேன்கொள் முன்னூறு—கொக்கித்
திருமுருகில்லையென்றாள் சொம்பொனிருநூறு
திருமுருகாளுக்குச் செய்தேன்—அரிவைசிறு
வாலுநரிபோன் மயிரிலெண்ணெய்வாங்குவது
போலேபறித்தாளென் பொன்னையெல்லாம்—மேலிருந்து

## விற்றிருந்து வெறுங்கையானமை கூறல்.

பாவையெனவோரான் பசையற்றிருக்கையிற்பொன்
றாவென்றாள்பொன்னறைஞாள் தான்விற்றேன்—மேவுங்
கடுக்கன்விற்றேன்கண்டிவிற்றேன் கள்ளளவுண்டிக்கிக்
கொடுக்கவகையற்றுக் குனிந்தேன்—ஒடுக்கமென்று

## துறத்தவகை தேடினமை கூறல்.

கண்டுகொண்டாரென்னைக் கடத்தவளப்படுத்தார்
வண்டுகொண்டகண்ணிகிட்ட வந்துமிராள்—பண்டிருந்த
பாராட்டைவிட்டாள் படுக்கவராள்வந்தாலும்
போராட்டங்கொள்வாள் புழுங்குவாள்—ஓரி
செருமுவாளந்தச் செருமலைக்கேட்டிந்த
அரிவைவெளியேறுவா ளங்கே—யொருவரல்ல
முப்பதுமாப்பிளைமார் மூலைக்குமூலையதை
யெப்படிநான்பார்த்திருப்பே னேங்கினேன்—அப்பால்

## தன்னை ஏசினமைகூறல்.

எனக்குவயிற்றெரிச்ச லிவ்வளவென்றில்லை
மனக்கவட்டுத்தாய்க்கிழவி வந்தாள்—உனக்குநெஞ்சி
லீரமிலையா விருந்தவிடங்காணியா
ஆரும்வந்தாற்கண்டொதுங்க லாகாதா—தூர
மடத்திற்போதிண்ணையிற்போ மங்கையிற்போவென்றாள்
அடித்தமுளைப்போலிருந்தே னங்கே—மடக்கொடியைக்

## தாய் மகளை ஏசினமை கூறல்.

கிட்டவைத்துக்கூனிசொல்வாள் கெட்டபுத்திக்காரன்முழு
மட்டியிவனுக்காசை வையாதே—கெட்டிவெகு
சட்டமொருகாசுமில்லைத் தன்கையிழந்தவனை
விட்டுவிரட்டல்லோ வேணுமடி—மட்டியுனக்
கென்னசொன்னானீயவனுக் கென்னசொன்னாய்நீயுமென்ன
சின்னவயசா தெரியாதா—பின்னவனைத்

தொட்டுநெயக்காவதென்ன சுட்டமண்ணும்பச்சைமண்ணும்
ஒட்டுமோமாப்பிளேமா ரொட்டுக்கு—வட்டமிட்டுப்
பாந்தித்திரியப் பசையற்றபையலேநீ
யேந்தித்திரிவ திளப்பமடி—காந்தல்மருந்
திட்டானுகிளைவேர்க் கேவேலம்வேணுமோ
தெட்டுமுபாயந்தெரியாதா—தொடடுனக்கு
மைக்கணிநான்தந்த மருந்துக்குச்சூரியனுந்
தெற்குவட க்காகத் திரும்புமே—சக்கைப்
பயலேவிரட்டென்றுள்நான் பையவொண்டித்தட்டி
யயலினின்றுகேட்டே னசந்தேன்—கயவர்க்

சண்டையிட்டமை கூறல்,

கெழுநூறுநன்றிசெய் தொன்றுதீதாமே
லெழுநூறுந்தீதாகு மென்று—நழுவிவந்தேன்
பாயிலேசேர்ந்தோர் பணத்தையெல்லாங்கொள்ளேயிட்டு
வாயிலேதேய்த்தனுப்பு மாமியார்—ஓயாமற்
காசைக்கொடுத்தோர் கலவித்தொனிகேட்டு
வாசற்படியிருக்கு மாமியார்—பேசிவைத்த
பொன்னைக்கொடாமலெட்டிப் போவாரைப்போய்ப்புலிபோல்
மன்னைக்குழி ாயு மாமியார்—பன்னுஞ்
செல்லக்கலவியோர் செம்புத்தண்ணீர்தனக்கும்
வல்லிக்குஞ்சாய்க்குமொட்டை மாமியார்—நல்லமகள்
சேர்ந்தகல்வித்தொழிலைத் திட்டிவாசற்கடலி
லாந்தியாந்திபார்க்கு மத்தையார்—பாந்தமாய்க்
கைப்பொனுள்ளபேரைக் கணவனென்றும்வீணர்களை
யப்பனென்றுஞ்சொல்லும்வறட் டத்தையார்—தப்பிமெள்ளப்
பிக்குரைத்துப்போவாரைப் பீசத்தைப்பற்றியிழுத்
தக்கணமேபொன்பறிக்கு மத்தையார்—சிக்கெனவந்
தேதடாபார்ப்பானீ யென்னசொன்னாய்சொன்னதற்குன்
காதையறுத்திரண்டு கண்பிடுங்கி—மோதிவிழச்
சில்வாயைப்பேர்த்தடித்துத் தேங்காயைப்பின்குடுமி
யில்வீழக்கட்டினு லென்சினம்போம்—அல்லவடா
வாவென்றுனேயாா வரவழைத்தாருன்பாட்டிற்
போவென்றாற்போகாயோ போக்கறுவாய்—பாவியிவட்
கம்மான்மகனுநீ யத்தைமகளாவெவளுஞ்
சம்மாவருவாளா சொந்தமுண்டா—பயமியொரு
மூக்கிலேநின்று முணுமுணுப்பதென்னடா
க்கலேவாடாவுன் னுற்றமெல்லாம்—பக்கத்திற்

பித்தாதேசும்மா பிதற்றுதேயக்காடி
யாத்தேகொடுப்பேனே யாகட்டும்—போர்த்துன்
கடையெடுத்துக்கட்டென்று கச்சைகட்டிவந்தாள்
அடைகிடக்கும்பாம்பு சினந்தாப்போல்—உடனே
நெருங்கியெருக்கிலைக்கு நீர்வார்த்தாப்போலே
யிருந்ததேபாதகத்தி யேழைக்—குரங்கன்
றுபகாரஞ்செய்ய வொருபாவிவேடன்
அபகாரஞ்செய்தகதை யாச்சே—விபகாரம்
வந்ததேயத்தே மருமகனென்றில்லையோ
யெந்தன்வயிறு மெரியுதே—தந்திரமா
யென்னைதந்தாயென்றுரைத்தா யிவ்வூரறியாதா
கன்னியறியாளா நீகாணாயா—பின்னும்
ஒருகையடித்தா லொருகையணையாதா
விரிவாய்நான்றந்ததெல்லாம் வீணா—யிருபத்து
நாலாண்டுக்குண்டுமக்கு நான்கொடுத்ததென்றுரைத்தேன்
காலாத்தகன்பேர்சைக் கண்டீரோ—கிலாநீ
தந்ததுகாற்காசுண்டா சாட்சியுண்டாவித்தனைபேச்
சிந்தப்படுவானுக் கேதென்று—வந்துவந்து
தில்லுமல்லாய்ப்பேசினாள் சீறுமாட்டின்கழுத்துச்
சல்லிபோல்வெள்ளைநரைச் சண்டாளி—நல்லபட்டாக்
கத்திகொண்டுமேற்சிலுப்பாக் காரனாநமொங்காரிச்
சத்திரியனங்கே சலுகைவந்தான்—அத்தறுவாய்
பித்தவெறிமட்டாய்ப் பிரட்டுத்திருநாவி
பத்தமில்லாப்பொல்லாப் படுக்காளி—செத்தநாய்ப்
பல்லாசுணைகெட்ட பாழ்ம்பதரேசீரழிந்த
மொல்லாய்க்கடைபட்ட முட்டாளே—பொல்லாத
சங்கைகெட்டமாடே தனுக்கெட்டகுக்கலே
பொங்கல்முட்டிதூக்கிப் புழுக்கையா—பங்கனாயா
சத்திகெட்டபேனாயே சாதிகெட்டவோனாயே
புத்திகெட்டிலச்சைகெட்டுப் போனாயே—வித்தையாய்
வண்டுபண்ணுங்கன்னியிடம் வைத்திருக்குதென்றாயே
உண்டுபண்ணவாடா வொழுவாடி—சண்டிமட்டா
யென்றுமடியைப்பிடித்தா ளெட்டிமயிர்நான்பிடித்தேன்
அன்றுகுடுமி யவள்பிடித்தாள்—நின்றுசிலம்
பத்திலொருலாகுகொண்டு பாய்ந்துலகிடுபோல்
அத்தையைக்கீழேபோட் டமுக்கினேன்—தத்தியவிழ்ந்
தென்சோமனுமுரிய வீனக்கிழட்டோரி
தன்சேலையும்போய்ச் சமுசியமாய்—முன்சே

## கிழவியறிவிப்புக் கூறல்.

சண்டியிந்தப்பார்ப்பான் சனியன்போலென்வீட்டிற்
பண்டொருநாள்வந்தான் பணங்கொடுத்தான்—ஒண்டொடியை
ஆவலுடன்சேர்ந்திருந்தா னப்பால்விடிந்தவுடன்
போமாறனென்றேயிருந்தேன் போகவில்லைப்—பாவையிவட்
கென்னபொடிபோட்டானோ வென்னையும்வாய்மட்டிவிட்டான்
பின்னொருவர்கிட்டவந்தும் பேசவொட்டாள்கன்னிலைப்
பாமரனுக்கையோ பகலென்றும்ராவென்றும்
ஏமமென்றுஞ்சாமமென்று மில்லையே—காமுகனுக்
கல்குல்பனியாரமா வப்பமுமாதோசையா
வெல்லவட்டாதேன்ராட்ட மெள்கரும்பா—செல்லமகள்
பென்னுடம்பிலிந்தப் பிழுங்தெறிவான்பற்பட்ட
புண்ணுமினிமேலாறப் போகுதா—சண்ணு
முகமினுக்குக்காரனொரு முப்பதுதண்டக்க
மகளைத்துடைமடக்க வொட்டான்—பகலெல்லாம்
அத்தையத்தையென்பான்பின் னந்திபட்டாற்கிட்டவந்து
சற்றேசற்றேயென்பான் தலைகுலைவான்—மெத்தக்
குதிரையுமேறிக்குதிரைக் குட்டியுந்தானேற
மதிகொண்டல்லோதிரிந்தாள் மட்டை—சதிகாரப்
பொய்பனியன்றண்ணீரிற் போட்டாலுந்தானனையான்
வெய்யலிலேபோட்டாலும் வெந்திடான்—கையார
வேதுங்கொடுத்ததில்லை யேனப்பாவிந்தமட்டும்
போதுநீபோவென்றாற் போகானே—மூதேவி
தானுந்தரானுந் தருவாரையுந்தரவொட்
டானுமிதென்ன வனியாயம்—யீனனொரு
புல்லிப்பசாசுவந்தாற் போலவந்தான்வாசலிலே
நல்லார்பொல்லார்களையும் நாடவொட்டான்—சொல்லிநித்தஞ்
சம்பளமாதத்தந்தமுத்துச் சாமியாபிள்ளையந்தச்
செம்பிகிட்டப்போனன் திரும்பானே—தம்பியிவன்
ஆதாளியைக்கண் டழகாஸ்திரிநாய்க்கன்
கோதையைப்போய்வைப்புவைத்துக் கொண்டானே—ஏதோ
ஒருகோடிதாரமென்று ளேப்பாக்குடிக்கி
யொருகோடியுங்கொடுத்த துண்டோ—பெருமையாய்
மச்சிருக்கும்வீடுகட்டி வைப்பனென்றான்வீடெல்லாம்
மச்சிருக்கக்கண்டேன் மறுத்தறியேன்—மொச்சையென்றுந்
தோசையென்றுமப்பமென்றுஞ் சோமனென்றும்பாலென்றும்
வாசக்கதம்பமென்று மாலையென்றும்—பேசித்

## விறலிவிடுதூது.

தனக்கென் றிவன்பறித்த தாலியல்லால்வேறே
யெனக்கென் றிவன்கொடுத்த தில்லை—தனிப்படுக்கைக்
கெள்ளுபொடியன் றிவன்கேட்பானில்லையென் றேற்
சள்ளுப்பிடிப்பான் சலங்கன்மட்டை—உள்ளறைக்குட்
பண்ணைக்கடாப்போற் படுத்துக்கொடுங்கிரந்திப்
புண்ணைக்கொடுத்தானே போக்கறுவான்—பெண்ணழகி
அச்சுப்போய்மேனி யழகுபோய்ப்பாருமிவள்
எச்சுப்போனாளினிநா னென்னசெய்வேன்—லச்சைகெட்ட
சந்தைமாங்கொட்டை சலுப்பர்பொதிசுமக்கும்
கிந்துகான்முட்டாட் கெடுகம்பன்—பந்தன்
முரண்டனுகாசவலை முற்றும்பாதாள
கரண்டிகிராளி கசடன்—பொருந்துகின்ற
நல்லமரத்தி னரையான்போல்வாழ்மனையில்
வல்லகுருநாதனடி வைத்தாப்போற்—சல்லியிவன்
ஆடெடுத்தகள்வனைப்போ லாட்கண்டராமனைப்போல்
நாடிநக்கப்புகுந்த நாயைப்போல்—தேடிவந்தான்;
ஆத்தேகொடுப்பானே யாட்டுக்கிடையைநாய்
காத்தாற்போலென்வீட்டைக் காத்தானே—நேத்தியிது
நேயமகளை நிறைபொதியிலேகழுத்தை
வாயைவைத்தாற்போலே வழிவைத்தான்—நாய்மலத்தில்
ஏழரைமாற்றுக்குறை யேச்சியுறவேழுநாள்
ஏழரைநாட்டானுக்கு மேற்றமிவன்—ஊழ்விதியோ
தாக்கிகிதுவைச் சனியனைவட்டிக்கி
வாங்கினதுபோல வரியவந்தான்—ஆங்காண்
நடத்தையுலகத்தி னரிக்கிடங்கொத்தாற்
கிடைக்கிரண்டாடுதின்னக் கேட்கும்—அக்கவெனக்
குள்ளமுதலெல்லா மொருமிக்கநாட்குநான்
கொள்ளையடித்தானே குடிகேடன்—எள்ளளவோர்
துட்டுமிலையென்வீட்டைத் தூத்தகளமாக்கிவிட்டான்
கட்டவொருசேலையிலைக் காணுமொரு—வட்டத்துண்
டானுலும்வாங்கிமகட் கானுலுந்தாருமென் று
நானுகவின் றுசொன்னே னுன்கொடேன்—பேனுயே
அப்புறம்போவென்றான்பின் னூர்கொடுப்பார்காணுமென்றேன்
றப்பிலிவெள்ளாட்டியென்று தள்ளினான்—குப்புறப்போய்
எட்டிவிழுந்தேன் றலையி லெட்டுமிதிபோட்டான்பற்
கிட்டிவிழுந்தேன்மகளைக் கீழ்ப்போட்டுத்—தொட்டித்தான்
நின்றோர்விலக்கிவிட்டார் நீங்கிப்பிழைத்துவந்தோம்
யின்றேயிவனையடித் தென்முதலை—யொன்றுப்

திருவைவிடாமலெல்லாம் நீர்வாங்கித்தந்து
தொலிதொலியென்றே தொலித்துக்—கலிகாலப்
பட்டுக்கிடப்பானைப் பார்ப்பாரப்பேயையெல்லை
விட்டுகடத்துமென்றாள் வெங்கூனி—சட்டமென்று

## அவதானி தன்னறிவிப்புக்கூறல்.

மாதவரெல்லோருமெனை வாருமென்றார்போய்நின்றே
னேதுகாணிக்க விரைச்சலென்றார்—சாகமாய்
முந்துவார்முந்துமுன் முடிச்சவிழ்க்கிமுந்திறுற்
பிந்திவழக்கென்னநான் பேசுவான்—இந்தமுண்டை
வல்லுரைக்கிப்பட்ட மரமுந்தழைபுமே
நல்லவயிற்றுப்பிள்ளை நழுவுமே—மெல்லமெல்லப்
பால்பீச்சினவன் பழங்கதையுந்தென்னைமர
மேலேறினவன் வெறுங்கதையும்—சீலியொரு
வம்பிடைச்சியான்மூக்கு வாங்கிவளவிற்போன
அம்படைச்சிசெய்த வபகடமும்—தம்பிளைக்
கன்றுதலைமேலரைச்சேலையைச்சபையிற்
சென்றொருத்திகட்டிவைத்த சித்தரமு—மொன்றியொரு
முண்டைகள்ளர்மக்களைப்போய் முத்தமிட்டமூக்குப்போய்க்
கொண்டவன்மேற்சாட்டிநின்ற கூக்குரலும்—பண்டுவந்தார்
தன்னிலிவர்தான்பூச ணம்பூத்தசாமியா
ரென்னவொருமங்கைசொல்லி யேய்த்ததுவு—முன்னுணை
கோழியைநான்றின்றவளென் கோதைதலைதின்றவளென்
றேழையொருத்தி யியம்பினதும்—வேழத்தை
வெட்டினேனென்றொருத்தி விண்டுகளவென்றுரைத்த
திட்டாந்தமுந் தெரியாத—துட்ட
மடக்கொடியார்நெஞ்சகமும் வானின்முடிவுங்
கடற்குழியினாழமுமார் கண்டார்—அடக்கியிவ
ளோடமேற்றிக்கூலி யும்பிடித்துவாங்குவாள்
நாடிமலைதன்னையும் நாகட்டுவாள்—தாடகையுஞ்
சாட்டியபொய்ச்சூர்ப்பனகை தானுமிவளுமொரு
கூட்டுமுன்பிராகவனைக் கோட்சொல்லிக்—காட்டில்
விடுங்கூனிசொற்கும் விலகலாமிந்தக்
கொடுங்கூனிபொல்லாத கூனி—நடந்தவகை
யொன்றுமில்லைமின்னா ளுடன்கூடிநான்சிலநா
லன்றிலும்போடுபோ லணைந்திருந்தோம்—நன்றாகக்
கூடியிருக்கையிலே கூனிமருந்திட்டாள்நான்
வாடிமயக்காய் மதிகெட்டேன்—கோடிக்கு

மேலுண்டிவர்கேட்டவேளையெல்லாம்பொன்னுமுத்தும்
நாலுவகைநகையும் நான்கொடுத்தேன்—நீயிபெற்ற
நாரியர்க்குமாப்பிள்ளைமார் நம்மையல்லாலாயிரம்பேர்
ஆரியர்க்குப்பால்போலு மாச்சுதகா—ணோரியிவன்
காசலையாய்க்கிளைக் கடைக்குமெகிர்க்கடையோன்
ருசிராய்வைத்திருப்பா ளட்டியிலைப்—பாசாங்குப்
பொய்யிலுள்ளம்பூண்டிருந்த பொன்னையெல்லாமள்ளியிட்டுப்
பையிலுள்ளதெல்லாம் பசையற்றேன்—கையிளைத்த
சேதியறிந்தென்னைத் தெருவிலேயோட்டுதற்குப்
பேதையுந்தாயுங்கூடிப் பேசினார்—பாதகா
என்னடாநீகொடுத்தா யேனிருக்கிறாயிருக்கச்
சொன்னவாரென்றுமடி தொட்டிழுத்துக்—கன்னத்தி
லஞ்சாறுபோட்டென் னையைச்சோமனைக்கிழித்துப்
பிஞ்சோடப்பூநூலைப் பிச்செறிந்து—நெஞ்சிலே
தாவிமிதித்துமுகந் தன்னிலேதுப்பினாள்
பாவிமருகனென்றும் பாராமற்—போவென்று
புகதிநொந்துசொன்னாளே போனதெல்லாம்போகட்டுஞ்
சொந்தவந்தையென்னைத் தொடலாமோ—விந்தமுறை
செந்நாய்கிழட்டோரி செய்ததெல்லாங்கண்டிருந்தும்
பின்னாளுங்கைநழுவ விட்டாளே—பின்னைநமக்
காசையென்னகாற்படிமுக் தாயிரம்பொன்னேர்வயிரம்
வாசபங்கைபாற்கொடுத்து வைத்திருந்தேன்—வேசையிவள்
எல்லைவர்க்கும்பெண்டாட்டி யீனச்சாதிச்சிறுக்கி
கல்லிலேநாருரிக்குங் காந்தாரி—சல்லியிடம்
இன்றெனதுகைப்பொருளை யெல்லாம்வாங்கிக்கொடுங்கள்
மன்றவரேயென்று வணங்கினேன்—நன்றடா

## பின்னுந் தாய்க்கிழவி யறிவிப்புக்கூறல்.

என்றைக்குநீகொடுத்தா யெட்டேகாலட்சணமே
யொன்றுபத்துவாளி யொழுவாடி—நன்றிகெட்டாய்
தூவணாதவணாச் சூவணாச்சூவணாத்
தோவணாத்தோவணாத் தோவணாத்—தூவணா
மையணாயேழஞ்சு மையணாப்பேயணாத்
தையணாவொன்றுமுக்கால்த் தையணாப்—பொய்யனிவன்
காலுந்தலையும்விற்றாற் காசும்பெறாததிரு
வாலியிவன்கொடுத்து வைக்கவில்லைமேலாவிற்
சாலக்கிராமலிங்கந் தப்பாமற்கொல்லுதே
மூலைக்கொத்தாள முனியுண்டே—யேலுவையாய்ச்

சக்கரக்கோட்டைக்கலுங்கிற் சத்திவிளங்குதே
மெய்க்காரியன்காவல் வெல்லுதே—சைக்குமெய்யாத்
தீர்த்துகொடுக்கிறேந் தீப்பறக்கக்காச்சிமழு
வேத்தியெடுக்கிறே மில்லையென்றால்—வீந்தியிந்த
வையன்றலைபி லடிப்போமிருபிறப்புப்
பையவிழுக்கெப்படிச் சொல்வான்—ஒருய்யும்
இரவலர்மேனீட்டுவர்கை யிவ்வுலகையாளும்
புரவலர்மேனீட்டுவர் பொற்றுளென்—றருமையாய்க்
கம்பர்சொல்லவில்லையா கைக்கூழுக்காகவவ்வை
யம்பலிற்போய்வெண்பா வறையலையா—அம்பலத்திற்
கன்னிலன்பாருமென்னைக் கண்டுகளுப்பியென்றுஞ்
சொன்னானேவேறொருவர் சொன்னாக்கால்—இன்னேரம்
வாயிலகப்பைக்காம்பை வைப்பேனொருமருங்கு
நாயன்மாரேயுமக்காய் நான்பொறுத்தேன்—ஐயா
தடித்தவரெல்லாருமெங்க ளாமக்கள்தான்யாம்
பிடித்தவர்க்கெல்லாந்தான் பெண்டாட்டி—படிக்குளே
யெங்கள்குலவிருதே யிப்படித்தானேச்சுமுண்டா
வெங்கணிவனூரைவிட்டு வந்தபின்னே—யங்குமிந்தத்
தாசிப்பயல்மனைவி தட்டமுண்டையாலவ்வூர்
வேசையிளப்பெல்லாம்போய் விட்டதென்றாள்—பூசுரர்கள்

சபையார் விசாரணைகூறல்.

சந்தடியிலேராம சாமியையரென்னெதிரே
வந்துமக்குப்புத்தி மடித்ததோ—இந்தவஞ்ச
மைவிழியாரை மனையகலென்றுமுன்னா
லவ்வையுரைத்தமொழிக் கட்டிவந்தால்த்—தெய்வமல்லோ
கொல்லுமென்றார்போங்காணுங் கூடிப்பிரியலென்று
மெல்லிநல்லார்தோள்சேர வேணுமென்றுஞ்—சொல்லி
யிருக்குதேயென்றே னிருந்தவர்களெல்லாஞ்
சிரித்தார்கள்நானுஞ் சிரித்தேன்—விருப்பமுள்ள
தத்தையர்க்கென்மேன்மனந்தான் சற்றுநேரங்கோபம்
அத்தையர்க்குங்கூட வளைமனசு—மெத்தவழக்
காட்டிவைக்கவேண்டாம்சீ ரம்பலத்திலென்னையினிக்
கூட்டிவைக்கவேணுமென்று கும்பிட்டேன்—வாட்டமாய்

சபையார் தன்னைத் தேற்றினமைகூறல்.

எல்லவருமென்முகம்பார்த் தேங்காணுமக்கொருவர்
சொல்லவதென்னுஞ்சற்றுஞ் சுணையில்லையா—அல்லநீர்
வேசையுடனம்பலத்தில் வீணைவரலாமா
வேசனுமக்கல்லவிது வெங்களுக்கே—பூசுரரே

வேசையுறவும் வியாபாரிதன்னுறவும்
காசுபணத்திற்காணலா மென்றும்—நேசமுள்ள
போதந்தனங்கல்வி போன்றவருங்காலமயன்
மாதமேன்மைக்கு மனமென்றும்—ஈதல்லால்
ஈரமில்லாநெஞ்சத்தார்க் கீந்தவுபகாரம்
நீர்மேலெழுத்துக்கு நேரென்றும்—நீர்படித்த
பாட்டிலுண்டேவேசைமனப் பற்றிராதென்றுநீர்
கேட்டுமிருப்பீரோ கேளீரோ—நாட்டிலென்றும்
பத்தியிவர்க்குண்டா பழையகுருடிகதை
வைத்திரடியென்றதென்ன வம்புக்கா—யெத்தாகக்
கூடவேசாவனென்று கோவணத்தைப்பற்றிமனை
தேடிவந்தாள்செய்தி தெரியாதா—ஊடுருத்துச்
சண்டாளையுமிந்தத் தாசியையுந்தீயையுநாங்
கண்டாலொதுங்குவதே காரியங்காண்—திண்டாடும்
ஈரமில்லாமூழிகளை யீனமழுமாறிகளைச்
சீரழிந்ததோசிச் சிறுக்கிகளை—நீர்தானும்
நட்டாற்றுக்கோரையைப்போ னம்பலாமாவிதெல்லாம்
விட்டாற்றிப்போடுங்காண் வேதியரே—தட்டழிந்து
மட்டதுகெட்டாலு மேன்மக்கண்மேன்மக்களே
கட்டிமாதங்கங்க வீரிடுமா—விட்டொழிந்து
போனான்மருங்குண்டு பொன்கொடுத்திருக்குதென்றீ
ரானால்வழக்குக் கழகலக்கா—னீனத்
திருடனுறவுந் திடற்பூனைப்பஞ்சுங்
கருடன்வாய்ப்புற்றரவுங் கானற்—பெருமழையும்
ஈசனறியச்சலத்துக் கிட்டவலங்காரமும்
வேசையருக்கிட்டதுவு மீளுமோ—தேசத்திற்
சென்றாழியெல்லாஞ் சிறப்புமதுவித்தையிற்பொன்
ஒன்றுயிரங்கோடி யுண்டாமே—நன்றுநன்று

## தான் கலக்கமுற்று தெளிந்தமைகூறல்.

மின்னைவிட்டுப்போமென்று வேண்டினார்பெண்ணானசை
யென்னைவிட்டுப்போமோநா னேங்கினேன்—அன்னியரைப்
போலேமயங்கிநின்றேன் பூவையைமுன்னடத்திக்
காலேறிச்சென்றாள் கடுங்கூனி—வேல்விழியாள்
ஏறிட்டுப்பார்ப்பாளென் றெண்ணினேன்பார்க்கவில்லை
மாறிட்டுநானும் வழிக்கொண்டேன்—றேறவிட
மில்லையேநம்மிடவூ ரெந்தத்திசையோவென்
வல்லியிருப்பெவ் வகையாச்சோ—சொல்லிநடமை

மெட்டுக்கெடுக்க விரட்டிவிட்டகூனியினிப்
பட்டுக்கிடக்கவறம் பாடுவமோ—கெட்ட
நினைவுகொண்டுசீரழிந்து நின்றேமெல்லாக்
கனவுகண்டோமென் றுமனங் கன்றிப்—பனிமொழியாள்
நாகசுனைநீங்கி நாகசுனைவீராடி
நாகலிங்கர்பாதமலர் நான்பணிந்து—தேகமெல்லாம்

## ஆலயங்கண்டு தெரிசித்தமைகூறல்.

பூரித்துநிற்கையிலோர் பூரணசந்திரனைச்
சூரியர்கள்பன்னிருவர் சூழ்ந்ததுபோற்—சேர்குழையில்
வண்டேறுநாகீசர் பார்பிற்பதக்கமென்று
கண்டேனென்கண்கள் களிகூர்ந்தேன்—பண்டுநான்
பூமிமுற்றுஞ்சுற்றியிது போற்கண்டதில்லைமுத்துச்
சாமிபட்டரேவிவரஞ் சாற்றுமென்றேன்—நேமிதொட்டு
மாலையழைத்தோர்சிந்து மன்னவனைவென்றதிரு
மாலைசிகராகமுக வைக்குள்வந்தோன்—கோலரத்னப்
பைம்பொன்மகுடபதி பாண்டிநாட்டாதிபதி
செம்பிநாடாளவந்த சேதுபதி—யமபுளிக்குள்
விமானிகர்முத்து விசயரகுநாதசிவ
சாமியிட்டபொற்பதக்கம் ருணசாஹுஞ—சாமியிது
மட்டோதந்தார் மதிச்சடையான்பாகிவெளர்
கட்டழகிக்குமகர கண்டியிட்டார்—கிட்டப்போய்
பாருமென்றார்பார்த்திப் பதக்கமிட்டானவனே
தாரணிக்கெல்லாமரசன் றனென்று—சீராசக்
[illegible] ராச ரீரோர் கோமே ரிமண்டபத்தைக்
கண்டிதெவாசெய்தபணி காணேனாறேன—பண்டதனில்
ஈசறியாதுண்டோனீ ரேதறியோமென்றீர்காண்
சேதுபுவிகாக்குஞ் செகராசன்—ராதுபதி
தாதுபதிகோடி தனபதிமுத்துச்செல்லர்
சேதுபதிபண்புடனே செய்துவைத்த—சோதிமணி
மண்டபங்காணென்றார் மகராசனைநினைத்துக்
கொண்டொருவெண்பாப்புகழ்ந்துகூறினேன்—திண்டுமுண்டுச்

## தான் இழந்தபொருளுக் கிரங்கினமைகூறல்.

சண்டாளிக்கிட்ட தனத்தையெல்லாமிப்படியோர்
மண்டபத்தைக்கட்டித்தான் வைத்தோமோ—கண்டமட்டுஞ்
சிங்காரக்கோபுரத்தைச் செய்தோமோசன்னிதிமுன்
மங்காமற்றேர்சமைத்து வைத்தோமோ—விங்கென்று

நொந்தேன்வடதிசையை நோக்கினேனூர்நாடி
வந்தேனங்கேயோர் மனங்கொண்டேன்—அந்தோ
இனிக்கோடிசென்ம மெடுத்தாலும்பாவம்
பினுக்கோடிப்பேருமோ பேரா—தனுக்கோடி
யாடிவந்தாற்றீருமென்றே யன்றேவழிக்கொண்டு
வாடிவந்தேனையர் மடத்தருகே—நாடிவரும்
பாதையெதிரேயிரண்டு பல்லக்கின்மேற்கனகச்
சோதிமணியாபரணத் தோற்றமா—யாதரவாய்
மைத்துனனுமைத்துனனு மானவவதானியிரு
வித்துவசனார்வந்தெதிரே மேவினா—ரத்தருணம்
யாவரென்றேன்கூடவந்தோ ராதிமூதுகுளத்தூர்
மேவுவடிவேலனருண் மேவிதளர்—நாவலவ
தீரனவதானஞ் செய்சரவணபெருமாள்
பேரனெனவந்த பிரபலவான்—சாரந்
தருந்துவாத்ரிம் சதவதானிபுலவோர்யா
வருந்துதிக்கும்பூங்கணைவின் மாரன்—றிருந்துமெழில்
நாடுபுகழ்சரவணப் பெருமாளுங்கலைமான்
றேடுமவர்மைத்துன சிரோன்மணியாஞ்—சோடசவ
தானவேலாயுதமா சற்குணனுமென் றுரைத்தார்
நானுமுடனேயவர்பா னண்ணியே—தானிருகை
யேந்தியாசிர்வாத மென்றேனவர்கள்வெகு
சாந்தமுடன்றெண்டன் சமர்ப்பித்தார்—சார்ந்துனீ
ரெங்கிருந்துவாரீ ரியானிமவதானியென்றேன்
அங்கேவருவாருமவ தானியரோ—வெங்குமுமைச்
சொல்லக்கேட்டிருந்திருப்போந் தோன்றவெதிர்கண்டதினம்
நல்லசுபதினங்கா ணாவலரே—தொல்லுலகை
யெங்கும்புரக்கு மிராசேந்திரன்முகவைச்
சிங்கஞ்சிவசாமி சேதுபதி—யெங்கோன்மேற்
சாற்றும்வருக்கக்கோவைப் தண்டமிழும்பாடியரங்
கேற்றியவதானமுஞ்செய் தேத்தினேந்—தோற்றமுள்ள
தண்டமிழ்கையாயிரம்பொன் சாதுராச்சாலுவைபொற்
கண்டையிட்டசோமன் கடுக்கன்மணிக்—கண்டியொன்று
தந்தான்பதக்கமொன்று தந்தானிருசிவிகை
தந்தான்கையாற்சிவிகை தாங்கினான்—சுந்தரக்கைத்
தாளமுழங்கத் தவின்முழங்கப்பேரிகையெக்
காளமுழங்கடங்கா முழங்க—வாள்வேந்தன்
கல்விப்பயிர்தழைக்கக் காசினியெல்லாந்துதிக்கச்
செல்வத்திருப்பவனி செய்துவைத்தான்—வில்விசையன்

ஞானவிசயரகு நாதசிவசாமியவ
தானியாரென்றுபெயர் தான்கொடுத்தான்—மாநிலத்திற்
கார்கொடுத்தார்போலக் கதிர்மணிச்சம்பாவிளையும்
ஊர்கொடுத்தான்கீர்த்தியை யுண்டாக்கினான்—பேர்படைத்த
பாவலரேயொன்றிரண்டு பாவலருமென்முகம்பார்த்
தாவலுடன்சொன்ன ரதிசயித்தேன்—நாவால்
எமக்குத்தியாகமுண்டோ வென்றேனடடா
வுமக்குக்கிடையாத துண்டோ—சமர்த்தன்வெகு
தாராளனெங்கள்சிவ சாமிமகாராசன்முல்லைத்
தாராளன்கையாற் றருங்கொடை—நேராமோ
கன்னன்கொடையுமொரு காற்கொடையாம்வெள்ளிமலை
மன்னன்கொடையுமரை மாதவரே—தன்னாலே
ஆற்பழுத்தாற்பட்சி யறியாதோதாகித்தவர்
சாப்பிடவாலிக்குட் டடையுண்டோ—போய்ப்பாரும்

## அப்பிரபுவினிடத்திற்குச் செல்லத் துணிந்தமை கூறல்.

என்றூரடையாள மென்னவென்றேனெங்கோமான்
மன்றன்முரசார்க்குமணி வயலிலே—வென்றிகொண்ட
மீனக்கொடியுநெடு விற்கொடியுமற்கொடிய
கானப்புலிக்கொடியுங் கைகுவித்து—வானத்தைத்
தொட்டகருடத் துவசத்தைச்சூழ்ந்துநித்தம்
வட்டமிட்டுச்சுற்றி வலஞ்செய்யும்—அட்டதிசை
மன்னர்திரண்டுகொண்டு வந்தளந்துவைத்தகப்பம்
சொர்னமகமேருவைப்போற் றோன்றிநிற்கும்—மின்னுமழைக்
கொண்டன்முழங்கிவருங் கொள்கைபோலேயாமற்
றண்டமிழ்ப்பாவாணர் தமிழ்முழங்கும்—வண்டொலிபோற்
சங்கொலிபோற்கஞ்ச நாதம்போன்முழவொலிபோல்
இங்கிதசங்கீத விசைமுழங்கும்—பொங்குதிரை
வட்டநெடுங்கடல்போன் மாறாக்கொடைகொடுக்கத்
தொட்டமுரசு தொனிமுழங்கும்—பிட்ட
அடையாளமெல்லா மறிந்துசென்றாலங்கே
கிடையாததுண்டோமெய்க் கீர்த்தி—புடையான்பால்
என்றுசொல்லிச்சென்றா ரிதுநல்லவேளையென்று
சென்றேனவ்வேசையையுஞ் சிந்தித்தேன்—அன்றுநான்

## மருதூரில் நின்று சென்றமைகூறல்

ஆனையிருக்கே பசைந்தாடும்வாசலிலே
பூனையிருந்து புலம்புமே—மேன்மைப்

புலியிருந்தகூட்டிலே போயேறிச்சின்ன
எலியிருந்துசத்த மிடுமே—வலியவாய்
வைச்சுநான்முத்தமிட்ட வாயிலேமற்றொருவன்
எச்சில்படமுத்த மிடுவானோ—கட்சிகட்டும்
சல்லியிந்தப்பார்ப்பான் சனியன்கழிந்ததென்று
சொல்லிமுத்தன்வந்து சுகிப்பானோ—வல்லியுடன்
தூங்குமஞ்சத்தேறுஞ் சுகத்தைநினைத்துநினைத்
தேங்கிப்பெருமூச் சிடுவாளோ—பாங்கியருந்
தேடுவார்கூனற் சிறுக்கிமனங்கல்லுநம்மைக்
கூடவொட்டாளென்றசந்து குப்புற்று—வாடிப்
பரிகொடுத்தபக்கிரிபோற் பாய்மரக்காகம்போ
லேரிகொடுத்தசேட்டுமத்தி லீற்போற்—கருகியுடல்
ஆவிமிகச்சேரநடந் தன்னையெங்கள்நீலகண்டி
கோவிலெதிராகநின்று கும்பிட்டேன்—பாவனையாய்

## முன்புத்திசொன்ன வேதமையரை மறுபடியுங் கண்டமைகூறல்.

ஆதிமுதற்புத்திசொன்ன வையரந்தவேளையிலே
ஏதுகவைக்கோவென் றெதிர்வந்தார்—நீதக்
கடன்காரர்தம்மையெதிர் கண்டவர்கள்போலே
யுடம்பாடிநின்றே னொருபால்—நடந்துவந்து
நண்ணிக்கைகோர்த்து நயந்துமுதுகைத்தடவி
கண்ணுக்குக்கண்ணான காவலரே—யென்னைக்
குடம்போலழகிருந்த கோலம்போய்நோஞ்சல்
உடம்பானீரேதென் றுரைத்தார்—நடந்த
கதையெல்லாஞ்செல்லிநீர் கற்பித்தபுத்தி
யதையல்லாங் கேளாததாலே—கெதிபோய்
உருவழிந்தேன்கையிலே யுள்ளபொருளும்போய்
அருமையும்போனதென்றே னையா—பெரியமத

## வேதமையர் தன்னைத் தேற்றினமைகூறல்.

யானைக்குமுண்டே யமடுநடக்கிறகால்
தானிடறுமீரேன் சலிக்கிறீர்—மேனாளில்
விட்டகுறைகாணும் விதிவசங்காணுமக்கு
மட்டுமல்லக்காமன் மலர்க்கணையாற்—றட்டழிந்து
சங்கரன்றீபபற்றினான் சந்திரனுமச்சழிந்தான்
எங்குங்குறுனிபொட் டேயிருக்கும்—சங்கீத
வித்தைக்களஞ்சியமே வேதக்கடலேநீர்
இத்தருணமேயுமதூர்க் கேகுங்காண்—உத்தமரே

கைப்பொருடன்னிலே மெய்ப்பொருள்கல்வியென்
றப்புறம்போனு ரதன்பின்பு—தப்பாமற்

## முகவையைநோக்கிச் சென்றமை

## நற்சகுனங்கண்டமை கூறல்.

பூனையிடப்பாய போத்துவலம்பாய
கானடந்தேன்றென்முகவை நாடினேன்—ஆனகலி
காலநம்மைவிட்டுக் கடந்ததினிமேனல்ல
காலமென்றுவந்தேன் கடைத்தெருவில்—சோலைமலர்க்

## நாட்டுவளங்கண்டமை கூறல்.

கொந்தாருமாமரகதக் கொம்பெல்லாம்வானுலக
மந்தாரக்கொம்பை வளைத்துநிற்க—இந்தநிலத்
துள்ளானைக்கொம்பெல்லா மும்பருலகத்துலவும்
வெள்ளானைக்கொம்புக்கு மேற்பாய—கள்ளுண்ணும்
வண்டுவிழிகாட்ட வள்ளைசெவிகாட்டக்
கொண்டல்கரிய குழல்காட்டத்—துண்டுதுண்டாய்க்
கஞ்சமுகங்காட்டக் கமுகுகளங்காட்டக்
கொஞ்சவிடையைக் கொடிகாட்ட—மிஞ்சுமலர்க்
காந்தள்கரங்காட்டக் கதலிதுடைகாட்ட
ஏந்துமுலையை யிளநீர்காட்டச்—சேர்ந்த
பவளமிதழ்காட்டமுத்துப் பல்வரிசைகாட்டக்
கவியுமெள்ளுப்பூநாசி காட்ட—உவகையாய்
ஆலுதரங்காட்ட வராற்கணைங்கால்காட்டவுள்ளங்
காலையணிச்சமலர் காட்டவே—கோலமெல்லாம
சித்திரமதாய்ப்பூமா தேவிவடிவாகுமென்று
புத்தியினுற்கண்டுமனம் பூரித்தேன்—பத்தியாய்க்

## பதியின்சிறப்புக்கண்டமை கூறல்.

கொத்தளக்கற்கோட்டைகளுங் கோலமணிமேடைகளும்
முத்தளக்கும்வாசல் முகப்புகளும்—சித்திரித்த
மாணிக்கக்கொட்டகையு மாளிகையுமண்டபமும்
ஆணிப்பொன்வீதி யழகுகளும்—காணும்
அமராபதிக்கு மளகாபுரிக்குஞ்
சமமாயழகு தயங்கக்—கமலமான்
சேர்க்கையுள்ளவேந்த ” சிவசாமிசேதுபதி
காக்குமுகவைநகர் கண்டுகொண்டேன்—பார்க்குளன்பர்
பூசிக்குமூலப் பொருளைநெடும்போற்கோட்டை
வாசற்கணபதியை வாழ்த்தினேன்—ஆசையுள்ளங்

கொண்டேனுட்புகுந்தேன் கோமானரண்மனையுங்
கண்டேன்மிகவுங் களிகூர்ந்தேன்—வெண்டிரையான்
முத்தங்கொழிக்கு முகவூரணிகண்டேன்
சித்தங்களிகூர்ந்தேன் றென்புறத்தில்—வைத்த
படித்துறையின்மேவிப் படிந்துநீராடி
யடுத்துநியமமுடித் தன்பாய்ப்—படித்துறையை

## விசுவநாதர்கோவில்கண்டு தரிசித்தல்:

நானேறினேன்விசுவ நாதர்திருக்கோவிலையுந்
தானேயோர்மூன்றுதரஞ் சுற்றி—வானுலவுங்
கம்பத்தின்முன்னின்று கண்டேன்கோதண்டமெனச்
செம்பொற்கிரிவளைத்த சேவகனை—நட்புமன்பர்
உள்ளத்திருக்கு முரவோனையுருவிலான்
வள்ளத்தைமாற்றுநெற்றிக் கண்ணவனை—வள்ளமுலைப்
பாலுண்டபிள்ளை பதிகத்துக்காய்ப்பிறவி
மேலுண்டோவில்லையென்ற வேதியனைச்—சேலுண்ட
கண்மணியைத்தென்னவர்கோன் கண்மணியைநன்மணியைப்
பொன்மணியைமாலையிட்ட பெம்மானை—வெண்மதியை
யாதித்தனைவிழியென் றானையன்றுநால்வருக்குப்
போதித்தஞானபரி பூரணனை—நீதிநெறித்
தன்மனத்தானத்தானைத் தன்கடுக்கைத்தாரானை
மன்மனத்தார்கண்ணெதிரே வாரானை—என்மனத்துள்
வந்தானைத்தேவர்குடி வாள்வேறச்சூரைவென்று
தந்தானைமுந்தானை தந்தானைச்—செந்தேனூர்
கந்தமலர்சூழ்முகவை காசியினும்வாசியென்று
வந்துமுளைத்தமறைக்கொழுந்தைச்—சிந்தைமகிழ்
தென்கோன்சிவசாமி யிந்திரன்செய்பூசனைக்காய்ச்
செங்கோல்கொடுத்த சிவக்கொழுந்தைப்—பொங்காழி
மண்டலத்தோர்வாழ்த்துபதி மந்திரிசாமாவையர்
தொண்டுசெய்யவந்த சுடர்விளக்கைக்—கொண்டமனப்
பத்திக்குள்ளாகிப் பரவும்பழவடியார்
புத்திக்குட்டித்திக்கும் புத்தமுதை—முத்தமிழாற்
சாற்றுமுயர்கல்வித் தலைவர்பிறவிக்கடலை
மாற்றும்பெருங்கருணை வாரிதியைப்—போற்றிமலர்
அள்ளியருச்சித் தடிபணிந்துதெய்வானை
வள்ளிமணவாளன் மலர்ப்பதத்தை—யுள்ளம்வைத்துத்
தண்டப்பிறையணிந்த சொக்கேசராலயத்தைக்
கண்டுமன்னிவாசற் கணபதியைத்—தெண்டனிட்டுச்

கன்னனெங்கோன்சமுகக் கச்சேரியார்களெல்லாம்
பொன்மயமாயாபரணம் பூட்டினார்—மன்னுகதிர்ச்
சீதமதிமுகத்தார் சீமைக்கச்சேரியார்
ஆதரவாய்த்தந்தார்க ளாயிரம்பொன்—சேதுபதி
காவலவனுக்கடப்பங் கட்டுவோரெல்லோருமெ
ஆலனுடன்றந்தார் நூறுணிமுத்து—காவலனைத்தும்
வந்தாருந்தாலூகா மாகாணத்தார்களெல்லாந்
தந்தாரைஞ்ஞூறுகலச் சம்பாநெல்—முந்துமுனை
வேலாயுதக்காரர் வில்லாயுதக்காரர்
மாலானசேவகரு மற்றோரும்—நாலிர்
விதமானவஸ்திரமுதன் மெய்வரிசைதந்தார்
இதுவேவரிசைநமக் கென்று—சதிராகத்
தண்டிகைமால்யானை சாப்பணியோர்கோடிசெம்பொன்
கண்டிபதக்கன் கடுக்கனுடன்—மண்டலத்தோர்
ஆருந்துதிக்க வதிகசெல்வங்கொடுத்தான்
தீரன்சிவசாமி சேதுபதி—பாரிலெனக்

## விறலியைத் தூதுவிடுத்தமை கூறியது.

கேதுங்குறைவுண்டோ யிவ்வரிசைபெற்றதெல்லாம்
மாதேவிறலி மடமானே—காதல்
மனையாட்குச்சொல்லி மனந்திருத்தியென்றும்
எனையாதரிக்கும்வகை யெல்லாம்—மனதாரச்
சேலைநழுவினுற் செங்கையேதாங்குமுலை
சாலவிழுந்தால்வயிறு தாங்குமென்று—மேலுமங்கே
நான்பட்டபாடு நடத்தையுநான்வந்ததுவுந்
தேன்பட்டசொல்லாட்குச் செப்பியே—கானவிசை
காட்டிமயக்காட்டிநெறி காட்டியுடனேவரவு
காட்டிவாவேற்றுக் கருணைபாய்க்—கூட்டிவந்து
புல்வாயெனவவள்பாற் போயுண்மையாய்வாழி
சொல்வாய்விறலிநீ தூது.

## வாழி.

வேதமுதல்வாழிமுத்து வீராயிநாச்சியார்
சீதவருள்வாழி செகம்வாழி—ஆதியென்ற
சிந்தூரமுன்காத்த சிவசாமிசேதுபதி
மித்திரனைப்போல் வாழியே.

விறலிவிடு தூது
முற்றிற்று.

